# நறுமணத்துடன் புது மலர்ச்சிதரும் அந்த முதற் காப்பியின் சுவை...



## ...நாளில் எந்நேரத்திலும்.

ஆஹா ! ஒவ்வொரு நாளையும் எத்தனை சிறப்பாக தொடங்கலாம். அம்மா தயாரித்த அந்த புத்துயிரூட்டும் அருமையான முதற் காப்பியுடன் ! ஈடு இணையற்ற அந்த கமகமவென்ற மணம் மற்றும் முழுமையான சுவைதரும் நிறைவு...உங்களுக்கு புத்துணர்ச்சி-யூட்டி, புலன்களைத் தட்டியெழுப்பும் அதன் மகிமை !

காலங்காலமாய் ஒரு சிறந்த எடுத்துக் காட்டு மாதிரி இருக்கும் அந்த காப்பியே எங்களையும் ஸன்ரைஸை தயாரிக்க ஊக்கமளித்தது.

**ஸன்ரைஸ். சிறந்த காப்பிக்கு ஒரு நற்சான்று.**

அம்மா தயாரிக்கும் காப்பி போலவே தயாரிக்கப்பட்டது ஸன்ரைஸ். புது மலர்ச்சியளிக்கும் அந்த முதற் காப்பியை எந்நேரத்திலும் விரும்பும் காப்பி அன்-பர்களுக்காக. அந்த முதற் காப்பியின் நறுமணத்தையும், சுவையையும் எந்நேரத்திலும் நீங்கள் வேண்டும் போதெல்லாம் அளிக்கும் ஒரு சிறந்த காப்பி-சிக்கரி கலவை.




Nestlé.
## ஸன்ரைஸ்
இன்ஸ்டன்ட் காப்பி-சிக்கரி ப்ளெண்ட்

**அம்மாவின் காலை காப்பியின் புத்துணர்ச்சியூட்டும் நறுமணத்துடன்.**

FSL-8517A TAM

# ஆரம்பத்தில் எம்.ஜி.ஆரை எப்படி எழுதினார்கள்?



✖ சாதனை வில்லன்





✖ கணவன் அன்றி கதாநாயகன் இல்லை

**படம்—ஒரு நல்ல ராகம். உடல்நல மில்லாத நாயகனைக் காண வரும் டாக்டர் வெளியூருக்குப் போகிறவர் எடுத்துச் செல்வது போலப் பெரிய சைஸ் சூட்கேஸைக்கையில் எடுத்துக் கொண்டு வருவார் !**

இப்படி தமிழ் சினிமாக்களில் வரும் எத்த னையோ தவறுகளை **"தமிழ் சினிமா — சில ஆய்வுகள்"** — என்ற தமது புத்தகத்தில் தொகுத்துத் தரும் ஆர். கே. அழகேசன் "அடேடே அப்படியா!" என்று நாம் வியக்கு மாறும் பல அபூர்வத் தகவல்களை வெளி யிடுகிறார்:

- *1938—ல் வந்த ஒரு தமிழ்ப்படத்தின் பெயர் 'தி கி. ஐ. டி. ஆஃப் மெட்ராஸ்.'*
- *முன்பு படங்களுக்கு இரட்டைப் பெயர் சூட்டும் வழக்கம் இருந்தது (உ—ம்) சந்திரமோகன் அல்லது சமூகத் தொண் டன்; கம்பர் (அ) கல்வியின் வெற்றி; சிந்தாமணி (அ) பில்வமங்கன்; அம்பிகா பதி (அ) அரசிளங்குமரி.*
- *1936—ல் 'ஸ்ரீமதி பரிணயம்' படத்துக்கு 'கௌரவமான குடும்பப்பெண்கள் நடித்த படம்' என்று விளம்பரம் செய்தனர்.*
- *1939—ல் 'ராஜாயி' படத்தின் போஸ்ட ரில், பெயரைத் தவறாகப் போஸ்டரில் அச்சடித்தனர்.*
- *முதல் முதலில் அயல்நாடு சென்று எடுக்கப்பட்ட படம் நவயுவன். நடித் தவர் — சடகோபன். சென்ற நாடு — இங்கி லாந்து.*
- *கணவனைத் தவிர (கிட்டப்பா) வேறு ஒருவருடனும் கதாநாயகியாக நடிக்க மாட்டேன் என்று கூறியவர் கே. பி. சுந்தராம்பாள்.*
- *ஆரம்ப காலத்தில், டைட்டிலில் எம். ஜி. ஆரை எம். ஜி. ராமச்சந்தர் என்றே எழுதினார்கள்.*
- *46 வருடங்களுக்கு முன் வந்த 'கௌ சல்யா' என்ற படம் ஒரே ஒருநாள்தான் ஓடியது!*
- *முதல் முதலில் இரட்டை வேடம் ஏற்று நடித்தவர் பி. யு. சின்னப்பா (படம்— உத்தம புத்திரன்).*
- *தமிழ் சினிமாவில் அதிகமான கற்பழிப்புக் காட்சிகளில் நடித்தவர் நம்பியார்.*
- *மதுரையில் 1933—ல் ஒரு அறிவிப்பு: "படம் பேசும்; ஆள் பேசுவது கிடை யாது: இந்த அதிசயத்தை இன்றே சிடி சினிமாவில் காணுங்கள்."*
- *பெண்களே இல்லாமல் வந்த படம் "பக்த ராமதாஸ்."*

தொகுப்பு: **மௌஷ்மி**

பிரசுரம்: டி. ஆர். குப்புசாமி
திட்டக்குடி. 606 106

விலை: ரூ 4.25

## தமிழ் சினிமா — சில ஆய்வுகள்!

## சிரிக்கவைப்பவருடன் சிறிது நேரம்

# கிண்டல் மன்னன் மாரியோ



○ இந்தி திரைப்பட உலகை அரா யப் போய்-''வெற்றி எப்படி தாக்கு கிறது. அதிர்ஷ்டத்தில் எப்படித்தொங் குகிறது...''



**கோவாவில் மாரியோவின் வீட்டில் பிரபல டைரக்டர் ஷ்யாம் பெனேகல் இந்திப் படம் ஒன்றுக்காக ஷூட்டிங் நடத் திக் கொண்டிருக்கிறார். இதனால் அடிக்கடி கோவா சென்று விடுகிறார் மாரியோ. ஓவியக் கண்காட்சி வேலை, புத்தகம் எழுதும்வேலை பத்திரிகைகளுக்கு கார்ட்டூன் என்று ஏக பிசி. இதற்கிடையில் இந்தப் பேட்டி.**

இந்தியாவின் மிகச்சிறந்த கார்ட்டூ னிஸ்ட்களின் பட்டியல் ஒன்று தயாரித்தால் அதில் ''மாரியோ''வின் பெயர் முக்கிய இடம் பெறும்.

'இல்லஸ்டிரேட்டட் வீக்லி', 'டைம்ஸ் ஆப் இந்தியா' 'மிட்டே,' 'எகனாமிக் டைம்ஸ்' முதலிய பல பத்திரிகைகளில் இவர் வரையும் கார்ட்டூன்களைக் கண்டு ரசிப்பவர்கள் லட்சக்கணக்கில். 'மாரியோ' உருவாக்கிய பிரபல கேரக்டர்களான மிஸ் 'நிம்புபானி', 'பால்ராஜ் பலராம்,' 'பண் டல்தாஸ்,' 'கோட் போலே' இவர்களைப் பார்த்தாலே சிரிப்புவரும். இந்தி சினிமாத் தொழிலைக் கிண்டல் செய்து இவர் வரைந்த கார்ட்டூன்கள் மிகப் பிரபலமானவை.

பம்பாயில் கொலாபாவில் வசிக்கும் 'மாரியோ மிராண்டா'விடம் கல்கி பத்திரி கைக்குப் பேட்டி என்றதும்,

''ப்ளீஸ் கேள்விகளைத் தமிழில் கேட்கா தீர்கள்'' என்று சொல்லிச் சிரித்தார்.

○ கல்கிக்காகப் பிரத்யேகமாய் மாரியோ தம் முகத்தைத் தாமே வரைந்து கொடுத்த படம்

''நீங்கள் எப்படிக் கார்ட்டூனிஸ்டாக உருவா னீர்கள்?''

''கோவாவில் பிறந்த நான் பங்களூரில் என் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு பம்பா யில் 'செயின்ட் சேவியர்ஸ்' காலேஜில் சேர்ந்து பி. ஏ..பாஸ் செய்தேன். சிறு வயதி லிருந்தே வரைவதில் எனக்கு ஆர்வம் உண்டு. எப்பொழுதும் கையில் ஒரு டைரி இருக்கும். இதில் அன்றாட நிகழ்ச்சிகளை ஸ்கெட்சாக வரைந்து தள்ளுவேன். காலேஜ் நாட்களில் எனக்கு பாக்கெட் மனி தேவைப் பட்டது. அதற்காக நான் வரைந்த கார்ட் டூன்களைப் பல பத்திரிகைகளுக்கு அனுப்பி னேன். அதில் சில பிரசுரமாகி சன்மானமும் கிடைத்தது. திடீரென ஒருநாள் ''டைம்ஸ் ஆப் இந்தியா''விலிருந்து 'கார்ட்டூனிஸ்டாக வேலைக்குச் சேரச் சம்மதமா?' என்று கேட்டு எனக்கு ஒரு கடிதம் வந்தது

○ "என்ன நடக்கிறது?" "சினிமா நட்சத்திரங்கள் ஒருவரிடம் ஒருவர் விடைபெற்றுக்கொள்கிறார்கள். பழக்க தோஷம்."

'சரி' என்றேன். இப்படியாக ஐ. ஏ. எஸ். படிக்க நினைத்த நான் கார்ட்டூனிஸ்டாக மாறினேன். வேலைக்கு நான் சேர்ந்த வருடம் 1959. அங்கு பல வருடங்கள் வேலை பார்த்த நான் பிறகு விலகிக் கொண்டேன். இப்பொழுது ஃப்ரீலான்சராக இருக்கிறேன்."

"உங்கள் தொழிலை நீங்கள் எந்த அளவு நேசிக்கிறீர்கள்?"

○ நிம்புபானியின் உலகம்.

○ நிம்புபானி பாணி பரத நாட்டியம்.

"என் தொழில் எனக்குத் திருப்தி அளிக்கிறது. ஆனால் எப்பொழுதும் ஒரே மாதிரி இருக்காது. சமயத்தில் சலிப்பு ஏற்படும். ஆனாலும் என் தொழிலை நேசிப்பது ஒன்றுதான் நான் செய்யக் கூடியது."

"இந்தியாவில் இத்தனை பெரிய ஜனத்தொகை இருந்தும் கார்ட்டூனிஸ்டுகள் ஏன் மிகக் குறைவாகவே உள்ளனர்?"

"கார்ட்டூனிஸ்ட்களுக்குப் போதிய உற்சாகம் தரப்படுவதில்லை இங்கு. போதாத குறைக்கு இதில் கஷ்டப்பட்டு உழைக்கும் அளவிற்கு வருமானம் கிடையாது. அதனால் இளைஞர்கள் இந்த வேலையில் காலடி எடுத்து வைக்கத் தயங்குகிறார்கள். மேலும் இந்தியாவில் பல மொழிகள் பேசுபவர்கள் இருப்பதால் அந்தந்த மொழியில் வரையும் கார்ட்டூனிஸ்ட்களை அந்தந்த மொழி பேசுபவர்கள் மட்டும்தான் ரசித்துப்பாராட்டுவார்கள். இதனால் அகில இந்திய அளவில் கார்ட்டூனிஸ்ட்டுகள் பிரபலமாவது சுலபமல்ல. இதெல்லாம் காரணமாக இருக்கலாம். என்றாலும் இப்பொழுது இந்தியாவில் கார்ட்டூனிஸ்டுகள் அதிகமாகிக் கொண்டுதான் வருகிறார்கள்."

"நீங்கள் இதுவரை எத்தனை புத்தகங்கள் எழுதியுள்ளீர்கள்?"

"நான் கார்ட்டூனில் வரைந்த ஆறு புத்தகங்கள் இதுவரை வெளிவந்துள்ளன. கோவாவைப் பற்றி, ஜெர்மனியைப் பற்றி.. இன்னும் சில நகரங்களைப் பற்றி. இப்பொழுது 'பாரீஸ்' நகரத்தைப் பற்றி ஒரு புத்தகம் தயாரித்துக் கொண்டிருக்கிறேன்."

"பம்பாயில் சமீபத்தில் நடந்த உங்கள் ஓவியக் கண்காட்சியைப் பார்த்து ரசித்த ஆயிரக்கணக்கானவர்களில் நானும் ஒருவன். பாரிஸ் நகரத்தைப் பற்றிய ஓவியங்கள் என்னை மிகவும் கவர்ந்தன. என் பாராட்டுக்கள்."

''மிக்க நன்றி. இந்த ஓவியக் கண்காட்சி வரும் மார்ச் அல்லது ஏப்ரல் மாதம் சென்னையிலும் நடக்க இருக்கிறது. கண்காட்சியை நடத்தித் தரப் போகிறவர் திரு. நாகி ரெட்டி.''

''உங்களுக்குப் பிடித்த கார்ட்டூனிஸ்டுகள் யார், யார்?''

''இங்கிலீஷ் மற்றும் அமெரிக்க கார்ட்டூனிஸ்டுகளைப் பிடிக்கும். குறிப்பாக GILES, OLIPHANT, S C H U L T Z (PEANUTS) போன்றவர்களின் கார்ட்டூன்களை மிகவும் ரசிப்பேன்.''

''பெரிய கௌரவமாகக் கருதப்படும் 'மக்ஸஸாய்' (Magsay say) பரிசு போன வருடம் ஒரு கார்ட்டூனிஸ்டுக்கு அதுவும் இந்திய கார்ட்டூனிஸ்டான ஆர். கே. லக்ஷ்மண் அவர்களுக்கு முதன் முதலாகக் கிடைத்திருப்பது பற்றி...?''

''பல வருடங்களாக நன்ருக வரைந்து வரும் லக்ஷ்மண் இந்த அவார்டு பெறுவது பொருத்தம் தான். அதற்கு முற்றிலும் தகுதியானவர். ஒரு இந்தியன் அதுவும் என் சக ஊழியரான லக்ஷ்மண் இந்தப் பெரிய சௌரவத்தைப் பெறுவதில் நான் பெருமைப் படுகிறேன்.''

''கார்ட்டூனிஸ்டாக வர விருப்பமுள்ள இளைஞர்களுக்கு உங்கள் யோசனை என்ன?''

''நிறையப் படிக்க வேண்டும். கார்ட்டூன்கள் வரைய பொது அறிவு மிகவும் முக்கியம். ஜனங்களையும், அவர்களைச் சுற்றியுள்ளவர்களையும் பார்ப்பதில் நல்ல கவனம் செலுத்த வேண்டும். மற்றவர்களின் கார்ட்டூன்களை ஸ்டடி செய்ய வேண்டும் (காப்பியடிக்கக் கூடாது.) இப்படிச் செய்து, தொடர்ந்து வரைந்து கொண்டே இருந்தால் நகைச்சுவை உணர்வு வரும். பிறகு தனித்தன்மையும் தானுக வந்து விடும்.''

''பிரபல கார்ட்டூனிஸ்டாக இருந்தும் சிம்பிளாகத் தோற்றமளிக்கும் 'மாரியோ' அலட்டிக் கொள்ளாமல் பதிலளித்தது என்னை மிகவும் கவர்ந்தது.

—செம்பூர் சந்துரு

---



படம் முடிந்ததும் வெளியில் வந்த இருவர் படத்தைப் பற்றிப் பேசிக் கொண்டார்கள்.

''படத்துல நம்ப முடியாத சீன்கள் நிறைய.''

''எது? கடைசி சீன்ல போலீஸ் கரெக்டா வரதைச் சொல்றியா?''

''இல்லே.''

''ஹீரோ தனி ஆளா, பத்து பேரை அடிக்கறதைச் சொல்றியா?''

''இல்லே.''

''வெள்ளத்துல அடிச்சிக்கிட்டுப் போற ஹீரோயின் உயிரோட எழுந்து வரதைச் சொல்றயா?''

''இல்லே.''

''ஹீரோவுக்கு லாட்டரில கோடி ரூபா பிரைஸ் விழறதைச் சொல்றியா?''

''இல்லே.''

''பின்னே எதைச் சொல்றே?''

''ஹீரோயின் அடிக்கொருதரம் ஹீரோக்கு போன் பண்ணுறு. உடனே லைன் கிடைக்குதே ஒவ்வொரு கடவையும் அதைத்தான் சொல்லறேன்.''

—எஸ். ஸ்

---

இரண்டாவது உலகப்போரின் போது 'பிரின்ஸ் ஆஃப் வேல்ஸ்' என்ற பிரிட்டிஷ் கப்பலை எப்படியும் மூழ்கடித்துவிட வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தனர் ஜெர்மானியர். ஆனல் அது எங்கிருக்கிறது என்று தெரியவில்லை. எனவே தந்திரமாக ஜெர்மன் ரேடியோ அறிவிப்பில், 'பிரின்ஸ் ஆஃப் வேல்ஸ்' கப்பலை ஜெர்மன் நீர்மூழ்கிக் கப்பல்கள் மூழ்கடித்துவிட்டன என்ற பொய்யான செய்தியை ஒலிபரப்பினர். பிரிட்டிஷார் இந்தத் தகவலை மறுத்துத் தங்கள் ரேடியோ அறிவிப்பில் 'அக்கப்பல் சிங்கப்பூருக்கு அருகில் பத்திரமா இருக்கிறது' என்ற தகவலைக் கூறினர். உடனே ஜெர்மானிய நீர் மூழ்கிக் கப்பல்கள் 'பிரின்ஸ் ஆஃப் வேல்ஸ்' கப்பலைத் தாக்கி அதை மூழ்கடிப்பதில் வெற்றியும் பெற்றன!

—ஏ. சுகுமார்.





○ ஜப்பான் - வெள்ளி மயில் பெற்ற படம்.



○ ஹங்கேரி - அப்பா வயதினரான ஒருவன்...

**பாசம், நேசம், கண்ணீர் மிகுந்த சமூக மற்றும் குடும்பப் படங்கள்:**

செக்கோஸ்லோவாகியாவின் *Incomplete eclipse*

*14* வயதுப் பள்ளிப் பெண் ஒரு விபத்தால் பார்வையை பின்னம் பின்னமாக இழந்து, முற்றிலும் மீட்க முடியாத போது குருடர் பள்ளியில் சேர்க்கப்பட்டதைச் சொல்லும் கதை. உண்மை தெரிந்து அந்த டீன் ஏஜ் புஷ்பம் குமுறுவது, மிரள்வது, அதிர்வது எல்லாமே அட்டகாசமான சித்திர வெளிப்பாடுகள் தாம். ஒரு சைக்கியாட்ரிஸ்ட் அவள் வாழ்வில் நம்பிக்கை ஏற்படுத்த முயன்று ஜெயிக்கிறார்.

கண்களைத் திறந்து கொண்டு பார்வையில்லாதவளாய் நடிக்க, அந்தப் பதினைந்து வயதிடம் தான் கற்க வேண்டும்.

ஜெ. ம. Comments: Very good

ப்ரேஸிலின் *They dont wear black ties*

ஃபாக்டரியில் யூனியன் பிரச்சினைகள் வெடிக்கிற நேரம். லீடர் ஒட்டாவியோவின் கொள்கைகள் இழுக்கு. சகதொழிலாளி — கம் — மகன் கொள்கைகள் மேற்கு. இழுக்கும், மேற்கும் மோதும் இப்படத்தில் குடும்பங்கள் இரண்டு.

ஒட்டாவியோவின் குடும்பம்; அவன் மகனால் கர்ப்பமான மரியாவின் குடும்பம். இந்தக் குடும்பங்களுக்கிடையே சிக்கலாகும் பிரச்சினைகள், உறவுகளின் இழுபறிகள். விறுவிறுப்பான கதை.

பாத்திரங்கள் அத்தனையும் மதுரை மீனாட்சி கோயிலில் செதுக்கப்பட்ட சிற்பங்கள்; ஒரு ஊனமில்லை.

வசனங்கள் ஆங்கில மொழிபெயர்ப்பிலேயே இத்தனை அட்டகாசம் என்றால் தாய்மொழியில் இன்னும் எத்தனை ஆழமிருக்கும்?

மனித உறவுகளின் ஆழ அகலங்கள், இன்றைய சமுதாயத்தின் அவசர அவலங்கள், எங்கும் இளைஞரைத் தொற்றியிருக்கும் அமைதியின்மை இதெல்லாம் இந்தப் படத்தில் இழையும் கவிதைகள்)

Comments: Very good

*APPASSIONATA:* (ஜப்பான்)

நாயகி ட்சுயாவின் சுவாசமே ஓவிய வர்ணங்களும், பிரஷ்களும் தாம். மீன் விற்கும் அம்மா. எனவே ஏழைக் குடும்பம். சித்திரம் வரைய கற்றுக்கொடுக்க முன்வரும் 'ஷோக்கல்' ட்சுயாவின் பதினைந்தாவது வயதில் குருதட்சிணையாய்க் கேட்பது கட்டை விரலை அல்ல. அதற்கும் மேலே. ஓவியப் போட்டியில் கலந்து கொள்ளும் ஆர்வம் அவருடைய அத்துமீறல்களுக்குப் பச்சை விளக்குக் காண்பிக்க இது வாடிக்கையான தட்சிணை ஆகிறது. வயிற்றில் குழந்தை. பிரச்சினை. ரகசியப்பிரசவம். குழந்தை, 'ங்கா' என்று முதல் அழுகை அழுதபின் ட்சுயா வேறு ஒரு டீச்சரிடம் அதே 'தட்சிணை' கொடுத்து மறுபடியும் ஓவியம் பயில — அவள் கதை தொடர்கிறது.

சில தைரியமான அரை நிர்வாணக் காட்சிகள். பின்னால் கொஞ்சம் நொண்டும் கதை. இருப்பினும் *Sadao Nakajima* (சாடௌ நகாஜிமா?) சிறந்த டைரக்ட

# இந்தப் படங்கள் போதுமா இன்னும் கொஞ்சம் வேணுமா?



○ பிரேஸில் - உறவுகளின் இழுபறிகள்



○ அமெரிக்கா: வாழ்க்கையை ஜெயிக்கும் நம்பிக்கை.

ருக்கான வெள்ளிமயிலைத் தட்டிச் சென்று அவர் வீட்டு ஷோகேஸில் வைத்துவிட்டார்.
Comments: OK

**CITY DREAMS (ஸிரியா)**

ஸிரியாவிலிருந்து வந்திருக்கும் அரேபியப்படம்.

1950-களில் ஸிரியாவின் அரசியல் அதிர்வுகள் பின்னணி. தீப் எனும் சிறுவன் மைய நரம்பு. விதவை அம்மாவின் காயங்கள் அவனை வருத்துகின்றன. இஸ்திரிக் கடையிலும், வண்ணான் சாலிலும் வியர்வை சிந்தி அம்மாவுக்கு நிழல் தரத் துடிக்கும் அந்த இளம் குருத்தின் உணர்வுகள் வெகு அழகாகப் பின்னப்பட்ட கோலங்கள். மறுமணம் வேண்டி பையனை அநாதரவாய் விட்டுப் போகும் அம்மா அந்த கல்யாணமும் உடைந்து போய் மறுபடி திரும்பும் போது அவன் அம்மாவை அணைத்து, கண்ணீர் சிந்தி, ஆறுதல் சொல்லித் தேற்றும் காட்சி நெகிழ்வானது.
Comments: good

**DIARY FOR MY CHILDREN: (ஹங்கேரி)**

அம்மா இல்லை. போர்க்காலத்தில் ஜெயிலில் இருந்து தப்பிக்க எங்கேயோ போய் ஒளிந்து கொண்டுவிட்ட அப்பா. எனவே பெற்றோர் அற்ற ஜூலி. சுற்றிலும் சடுமையான பேச்சுக்கள். உப்புச்சப்பற்ற வாழ்க்கை. வெறுமை.

திடீரென அவள் அப்பா வயதினனான ஒருவன், அவள் உள்ளத்தைத் தீண்ட 'அப்பா' 'அப்பா' என்று அவனோடு ஒட்டிக் கொள்ளும்போது அவனும் ஜெயிலில் போய் சிக்க அவள் வாழ்வில் மறுபடி வெறுமை.

ஒரு தனிமையான இளம் பெண்ணின் துடிப்பான தேடலும், அவளின் சுயதுக்கங்களும் கனமாய்த் தங்குகின்றன. சற்று அவசரமான நிறைவில்லாத முடிவு.
Comments: OK



○ ஸிரியா: தீப் எனும் சிறுவன் மைய நரம்பு

**THE HOTEL NEW HAMPSHIRE: அமெரிக்கா**

உலகப்போரிலிருந்து திரும்பி வந்த வின்பெர்ரி தொழில் தொடங்க எண்ணி ஒரு பழைய பள்ளிக்கூடத்தை வாங்கி ஹோட்டலாக உருமாற்றுகிறான். ஆனால்—

எங்கு திரும்பினாலும் பிரச்னைகள். பருவம் வந்த மகளை ஒரு குருப் மாணவர்கள் Mass Rape செய்கிறார்கள். அப்பா இறக்கிறார். குடும்ப நாய் இறக்கிறது.

குடும்பம் வியன்னாவில் போய்க் காலூன்ற முயல்கிறது இதே தொழிலில். அங்கேயும் அந்த ஹோட்டலில் வன்முறையாளர்களின் ரகசியக் கூட்டங்கள். விலைமாதர்களின் அட்டகாசங்கள். அரசியல் ஆதாயத்திற்காக இந்தக் குடும்பத்தைப் பணயமாகப் பிடிக்க சிலர் முயல, நடக்கும் கைகலப்பில் வின்பெர்ரியின் பார்வை க்ளீன்போல்ட்,

**ஜெயமன்மதன்**

**சாதனா –**

# தெரிந்த முகம் தெரியாத விஷயம்

அட்டைப்பட அழகி குமாரி சாதனா ஸ்ரீவாஸ்தவா, இந்தியா முழுதும் அறிமுகமானவர். தில்லி மிராண்டா கல்லூரியில் 79–ல் சரித்திர ஆனர்ஸ் முடித்த கையோடு டி. வி.யில் சேர்ந்தவர். தில்லி பப்ளிக் ஸ்கூலில் ஜெர்மன் போதிக்கிறார். தமிழகத்துக்கு ஒரு டி. வி. படத்துக்காக வந்திருக்கிறார். இவருக்கு வரும் நேயர் கடிதங்கள் அதிக அளவு தெற்கேயிருந்து தான். அதிலும் குறிப்பாகச் சென்னை. ராமு என்பவர் பக்கம் பக்கமாகக் கவிதையாகவே இவருக்கு எழுதி அனுப்புகிறாராம். ''நான் அவருக்கு நன்றி தெரிவிக்க விரும்புகிறேன். அவரோ ஒரு கடிதத்தில் கூடத் தம் முகவரியைக் கொடுப்பதில்லை!'' என்கிறார் சாதனா!

ஜெர்மன் வானொலி நிலையத்தினர் அங்கே வேலை தருவதாகக் கூப்பிட்டார்களாம். மறுத்துவிட்டார், சாதனா.

திருமணம்? பெற்றோர் பார்த்து நிச்சயிக்கிறபடிதானாம். ''கணவராக வருகிறவர் டி. வி. வேலையை விட்டுவிடு என்றால் என்ன செய்வீர்கள்?''

''அவரை கன்வின்ஸ் செய்வேன். ஆனால் என்னைப் பொறுத்தவரை பார்வையாளர்கள் ஒதுக்கித் தள்ளும் வரை டி. வி. யில் இருப்பேன்!''

—சித்தார்த்

வண்ணப்படம்: யோகா



எனவே மறுபடியும் அமெரிக்கா திரும்பி மறுபடியும் வாழ்க்கையை ஜெயிக்கும் நம்பிக்கையுடன் மறுபடியும் *'The Hotel New Hampshire'* துவக்குகிறது குடும்பம். கதை அலிபாபா குகைக்குப் போகிற வழி மாதிரி சுருண்டு, மடங்கி, நெளிந்து போகிறது. பாத்திரப் படைப்புக்கள் இயல்பானவை.

*Comments:* OK

*FLESH OF THY FLESH:* (லாட்டின் அமெரிக்கா)

கொலம்பியா நாட்டின் மூட நம்பிக்கைகள். ஒரு அண்ணனும் தங்கையும் தகாத உறவு வைத்துக்கொள்ள, இறந்து போன மூதாதையர்களின் ஆவிகள் அந்தச் சின்னப் பெண்ணையும், பையனையும் பிடித்து ஆட்டுகின்றன. ரத்தம், ரத்தம் என்று தாகத்தில் துடிக்கும் அந்தச் சிறுவர்கள் புதிதாய்ப் பிறக்கும் ஒரு சிசுவை மோப்பம் பிடிக்கிறார்கள். மெல்ல மெல்லத் தாயிடமிருந்து சிசுவைப் பறித்து வந்து சப்புக்கொட்டி சாப்பிடுகிறார்கள். பெற்றவன் துரத்திவந்து இவர்களைக் கொன்று புதைக்கிறான். மறுபடியும் கல்லறையிலிருந்து புறப்பட்டு வேட்டை தேடிக் கிளம்புகிறார்கள் என வரிசையாய்ப் பூ சுற்றும் கதை. சிறுவர்களின் வாயோரம் கெப்பைத் தேய்த்து விட்டாலுங்கூட அருவருப்பாய் இருக்கிறதே தவிர எதிர்பார்த்த பயம் வரவே மாட்டேன் என்கிறது.

*Comments:* பார்க்காமலே விட்டிருக்கலாம். பார்த்துத் தொலைத்த பிறகு தானே படு திராபை என்று தெரிகிறது.

அன்புள்ள ரசிக வாசகப் பெருமக்களுக்கு வணக்கங்களுடன் **ஜெயமன்மதன்.** நான்கு வாரங்களாய் நீங்கள் பார்த்த படங்கள் இந்த இதழில் நிறைவு பெறுகின்றன. ஆனால் இத்திரைவிழாக்கள் நிறைவு பெறுவதில்லை. அடுத்த வருடமும் தொடரும். அப்போது நாங்கள் உங்களை மீண்டும் திருவிழா ஜெயமன்மதனாகச் சந்திப்போம். எனவே, இதுவரை படித்து எங்கள் முகவரியைத் தேடும் நண்பர்களுக்கும் படிக்காமல் தப்பித்த நண்பர்களுக்கும் வந்தனங்கள். ஜெய்ஹிந்த்! ஜன கண மன அதி நாயக ஜெயஹே பாரத பாக்யவிதாதா...

# நீங்கள் கேட்டவை

## தராசு

○ கே. கோபாலன், பங்களூர்.

? முன்பு ராஜீவிடம் அவமானப்பட்ட அஞ்சையா மந்திரிசபையில் இடம் பெற்றிருப்பது எதைக் குறிக்கிறது?

! அவமதித்த ''கை''தான் அணைக்கும்!

○ எஸ். பிரேமா, காரைக்குடி.

? தாங்கள் அளிக்கும் பத்து ரூபாய்ப் பரிசை எப்படியும் ஆறு மாதத்துக்குள் பெற்று விடுவதாகத் தோழியிடம் சவால் விட்டிருக் கிறேன், ஜெயிப்பேனா?

! ஜெயிப்பது சாத்தியமல்ல. இப்படிப் பட்ட கேள்விகள் தொடர்ந்தால் — குட்லக்!

○ டி. பாரதி, அம்பத்தூர்.

? தேர்தலில் கருணாநிதி, கிரிக்கெட்டில் கவாஸ்கர் இருவரின் தற்போதைய நிலை என்ன?

! கருணாநிதி விஷயத்தில் கபில்தேவ்கள் இல்லை.

○ எஸ். எஸ். மணி, திருவனந்தபுரம்.

? அக்கா பி. எச். டிக்கு தம்பி எல். கே. ஜி. எழுதிய கடிதம் எப்படி?

! எல். கே. ஜி. யாவது, பி. எச். டி. யாவது? அ. இ. அ. தி. மு. க. தலைமை முழுவதுமே இன்று நர்ஸரி. அதிலும் டீச்சர் வர வில்லை. அவருக்கு பிப்ரவரி 4—ம் தேதி வரை லீவாம். கும்மாளம்தான்!



○ சலீம் தமீஜுதீன், நெல்லிக்குப்பம்.

? மூட்டைப் பூச்சியைவிடக் கொசு எந்தவிதத்தில் உயர்ந்தது?

! இதனுடைய ''நறுமணம்'' அதனிடம் இல்லையென்றால் அதன் ரீங்காரம் இத னிடம் இல்லை. நாட்டிலிருந்து இரண்டை யும் ஒழிக்க முடியாது. இரண்டுமே குருதி உறிஞ்சி வியாதிகளைப் பரப்பும் ஆற்றல் உடையவை... ஒன்று வேணு மானால் சொல்லலாம். வீட்டை வெள்ளை யடித்துச் சுத்தமாக வைத்துக்கொண்டு, மூட்டைப் பூச்சி வராமல் தடுக்க முடியும். ஆனால் கொசுவை எப்பேற்பட்ட செல் வந்தனின் மாளிகையானாலும் தவிர்க்க முடியாது. அந்த விதத்தில் கொசு உசத்திதான்!



○ வெ. பாலன், கோடைக்கானல்.

? ஒரு வைஜயந்தி மாலா, ஒரு ஜெயலலிதா ஆகி யோரின் தைரியம் யாருக்கு வரும் என்று நடிகை லட்சுமி கூறியிருப்பது பற்றி உங்கள் கருத்து?

! அபத்தம். அவர்களுடைய துணிவு சுயமானது அல்ல. பின்னணியில் ராஜீ வும், எம். ஜி. ஆரும் இருப்பதால் உண் டான தைரியம் தான். அரசியலில் புகா மல் இருக்க லக்ஷ்மிக்கு உள்ள தைரியம் கூட இவர்களிடம் கிடையாது.

# பி.எச்.டிக்கு எல்.கே.ஜி எழுதிய கடிதம் பற்றி...?

○ இரணியல் கலி, சென்னை-57.

? தமிழில் வெளியாகிற எல்லாப் பத்திரிகைகளையும் வாங்கிப் படித்து உடனே கடிதம் எழுதுகிற எங்களைப் போன்றவர்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! உடனே கடிதம் எழுதுவதால் கடிதம் எழுதாத (அதற்குப் பல காரணங்கள் இருக்கும்) பெரும்பான்மையினரை விட நீங்கள் எங்கள் மதிப்பில் அதிகமாக உயர்ந்து விடமாட்டீர்கள்; மற்றவர்கள் குறைந்து விடவும் மாட்டார்கள். எனவே நன்றி, மீண்டும் சந்திப்போம்!

○ ஜி. பாரதி, காங்கயம்.

? சரித்திரம் படைத்த இளம் ஆட்டக்காரர் அசாருத்தீனைப் பற்றி...?

! இந்தக் கேள்விக்கு திரு. **மில்கா சிங்** அவர்களைப் பதில் கூறுமாறு வேண்டினேன். அவரது *Expert Comments:* ''மிட் ஆன், மிட் விக்கெட் இடையில் அவரது ஸ்ட்ரோக்குகளைக் கவனியுங்கள். மீடியம் வேகப்பந்து வீச்சை முன் வைத்த காலை நன்கு ஊன்றி அவர் கவர் டிரைவ் செய்வது பிரமாதம். விக்கெட் கீப்பருக்கும் லெக் ஸ்லிப்புக்கும் இடையில் அவரது ஸ்வீப்கள் வெகு அழகு. ஸ்பின் போலிங் எனில் கிரீஸுக்கு வெளியே வந்து சந்திப்பதிலும் சமர்த்தர். இதெல்லாவற்றையும் விட முக்கியம் எந்தப் பரபரப்பு சூழ்நிலையிலும் நிதானமிழக்காமல் அமைதியாக நின்று ஆடும் குண இயல்பு. இதற்கு உதாரணம் சென்னை டெஸ்ட்டில் இரண்டாவது இன்னிங்ஸில் அவர் ஆடியது. 3 விக்கெட்டுக்கு 22 என்றிருந்த ஸ்கோர் அமர்நாத்துடன் இணைந்து இவர் ஆடவும் 4 விக்கெட்டுக்கு 212 என உயர்ந்தது! இவர் நாட் அவுட். அசாருத்தின் இந்திய கிரிக்கெட்டின் எதிர்கால நம்பிக்கை நட்சத்திரம்.'' (புகைப்படம்: பாலாஜி)

○ திருமதி. தேவனாதன், மதுரை.

? ஜல்லிக்கட்டு நேரில் கண்டு ரசித்த அனுபவம் உண்டா?

! காட்டுமிராண்டித்தனம் என்று சிலர் கூறுவர், வீரம் என்று பலர் வர்ணிப்பர். ஸ்பெயின் தேசத்தில் இத்தகைய விளையாட்டின்போது காளை துன்புறுத்தப்பட்டுக் கொல்லப்படுவதால் அது கொடூரம். தமிழ் நாட்டில் முரட்டுத்தனமான விளையாட்டு என்றாலும் வாயில்லா ஜீவன் இம்சிக்கப்படுவதில்லையாதலால் வீரமாகவேதான் தோன்றியது எனக்கு.

○ எஸ். சோமு, மதுரை.

? அனுராதா தி. மு. க. வில் சேர்ந்து விடுவாராமே?

! அப்படியா! அவர் டைரக்ஷன் பொறுப்பை ஏற்றாரா என்ன? அவருக்கும் படாதிபதிக்கும் இடையில் தகராறு வந்ததா என்ன? மத்தியஸ்தத்துக்காகக் கோர்ட்டுக்குப் போனாரா என்ன...?

○ வேதா, திருவாரூர்.

? ஜெயலலிதா டி. ராஜேந்தரைப் பாராட்டிப் பேசியிருப்பது குறித்து...?

! எதிரியின் எதிரி எனக்கு நண்பன்.

○ கேப்டன், பம்பாய்.

? அரசியல் பொதுக் கூட்டங்களால் யாருக்கு என்ன நன்மை?

! போஸ்டர் அச்சடிப்பவர்கள், ஒட்டுபவர்கள், மைக்காரர்கள், மேடை, பந்தல் நிர்மாணிப்பவர்கள், பட்டாணி கடலை விற்பவர்கள், பெட்ரோமாக்ஸ் லைட்காரர்கள் மின் விளக்கு போடுகிறவர்கள் போன்ற பலருக்கு ஆதாயம் தான். பொது மக்களுக்கு இலவச 'என்டர்டெய்ன்மெண்ட்.' களிப்பூட்டாமல் தலைவலி தருவித்தாலோ டாக்டருக்கும், மருந்துக்கடைக்காரருக்கும் லாபம். அபூர்வமாகச் சில அரசியல் கூட்டங்கள் அறிவை விசாலப்படுத்துகிற அளவில் நன்மையாக முடியக்கூடும்.

○ பி. டி. சண்முகராஜ், பல்லாவரம்.

? சட்டசபைத் தேர்தலில் ஹெக்டே தாக்குப் பிடிப்பாரா?

! ஏற்கெனவே கூறி சொல்லிவிட்டு அசடு வழிந்து கொண்டிருப்பது போதாதா? எம். ஜே. அக்பர் மாதிரி ஒரு குரல் அழ வேண்டுமென்கிறீர்களா! ஹெக்டே தாக்குப் பிடிப்பது அவர் வாக்குப் பிடிப்பதைப் பொறுத்திருக்கிறது. ஆளை விடுங்கள்.

○ எஸ். ஜே. ராமநாதன், திருநெல்வேலி. ★

? பத்துக் குழந்தைகளுக்கும் அதற்கு மேலும் பெற்ற பெண்களுக்கு வீரத்தாய் பட்டமும், பரிசும் தருவது தேசநலனுக்கு எதிரான செயல் என்பதை உணர வேண்டாமா?

! குடும்பக்கட்டுப்பாட்டுத் திட்டத்தில் ஹிந்துக்களே அதிகமாக ஈடுபடுத்தப்படுகிறார்கள்; வேறு சில மதத்தவரை இத்திட்டம் அணுகுவதில்லை; எனவே, நாளாவட்டத்தில் ஹிந்துக்களின் எண்ணிக்கை குறைந்து போகும் என்ற அச்சம் காரணமாக உருவான எதிர் மறைப் போக்கு இது. இந்த நெகடிவ் அப்ரோச் பலன் தராது. இருதாரத் தடைச் சட்டம், குடும்பக்கட்டுப்பாடு திட்டம் முதலியவற்றை மனமுவந்து அனைவரும் ஏற்குமாறு நல்லெண்ணத்துடனும் காரணங்களை விளக்கியும் பிரசாரம் செய்வதே நற்பயன் தரும்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

எஸ். ராமநாதன்,
1. குவார்ட்டர்ஸ்,
மெடிகல் காலேஜ்,
**திருநெல்வேலி – 627 011.**



# நல்வரவு கூறுகிறோம்

இந்த இதழ் நேயர்களின் கரங்களை அலங்கரிக்கும் போது தமிழக முதல்வர் தாய்நாடு திரும்பியிருப்பார். அநேகமாக அமைச்சரவையும் அமைந்திருக்கும் என எதிர்பார்க்கிறோம்.

முதல்வரை வரவேற்க மாபெரும் ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. பல்லாயிரக் கணக்கில் மக்கள் தலைநகருக்குத் தருவிக்கப் படவிருக்கிறார்கள். போலோ மைதானத்தில் உயர்மேடை அமைத்து அதில் முதல்வர் ஏறித் தரிசனம் தருவதெனத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

அமெரிக்காவின் அதிபரிசுத்தமான சூழ்நிலையிலிருந்து இங்கு திரும்பும்போது அதே அளவு புறத் தூய்மை இங்கு இராதாகையால், எமனுடன் போராடி வென்று திரும்பியுள்ள முதல்வரை இன்னும் சில காலம் கண்ணேபோல் காக்க வேண்டிய அவசியம் இருக்கிறது. எனவே மக்களைத் திரட்டுவதும் புழுதி கிளப்புவதும் அவரை மேடை ஏற்றிக் காட்டிப் பொருள் ஆக்குவதும் அவசியமா என்றெண்ண வேண்டியிருக்கிறது.

மக்களிடம் அவருக்குள்ள செல்வாக்கைப் புதிதாக நிரூபிக்கத் தேவையில்லை. மக்களும் எம். ஜி. ஆரைப் பார்த்தே ஆகவேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கப் போவதில்லை. சொன்னால் புரிந்து கொள்வார்கள்.

இன்றையத் தேவை அலங்கார வளைவுகளும், ஆர்ப்பாட்ட வரவேற்புகளும் அல்ல. ஆக்கப்பணி. ஏற்கெனவே ஏகப்பட்ட கால விரயம் ஆகிவிட்டது.

எம். ஜி. ஆர். படுக்கையில் விழுந்ததிலிருந்து இதர அ. இ. அ. தி. மு. க. தலைவர்கள் அநாகரிகப் பலப் பரீட்சையை நடத்தியதை, ஒருவர் மீது ஒருவர் அவதூறு சேற்றை வாரி அடித்ததையெல்லாம் ஒரு கெட்ட சொப்பனம் போல் எண்ணி மறந்துவிடுவோம். இனியேனும் அனைவரும் சுயமுன்னேற்றம் கருதாமல் ஒற்றுமையாகத் தமிழகத்தின் முன்னேற்றத்துக்குச் சுறுசுறுப்பாகப் பாடுபடட்டும்.

தமிழக முதல்வருக்கு மட்டுமின்றி தமிழகத்தின் வளமான எதிர்காலத்துக்கும் நல்வரவு கூறுவோம்.


லோங்கோவால்
அகாலி தலைவர்கள் சிறைவாசம்


பேச்சுவார்த்தை


இ. காங்கிரஸ்
பாண்டி தேர்தல்




வைடமின் இன்ஜெக்ஷன் போட்டிருக்கேன்!... தெம்பு வந்துடும்!
வடசென்னை- எழும்பூர்- பெரம்பூர் தேர்தல் வெற்றி
வாக்காளர்


எங்க இருதயம் நல்லா தான் இருக்குது!.. அந்த கோஷ்டியை சோதனை பண்ணுங்க!




சுத்தப் பொய்! அந்தக் கோஷ்டியைத் தான் சோதனை பண்ணணும்!



கல்கி

1985 பிப்ரவரி 10
மலர் : 43 இதழ் : 28
ரக்தாக்ஷி தை 28



# உலகம் உய்ய ஒரே வழி!

ஐந்து நாடுகளின் தலைவர்களைப் புதுதில்லிக்கு வரவழைத்து அவர்களுடன் ஆறாவது தலைவராக இருந்து, நமது பிரதமர் ராஜீவ் காந்தி அணு ஆயுத ஒழிப்புக்கு உச்சக்கட்ட மாநாடு நடத்தியிருப்பதைப் பாராட்டுகிறோம்.

''அணு ஆயுதப் போட்டியில் விண்வெளிப் புரட்சி'' என்று ருஷ்யாவால் வர்ணிக்கப் படுமளவில் அமெரிக்கா ஒரு ரகசிய ஆயுதத்தை விண்வெளிக்கு அனுப்பிப் பரீட்சித்துப் பார்த்துக் கொண்டிருக்கும் கட்டத்தில், சத்தியம், அஹிம்சை என்ற இரு தத்துவங்களை எந்தக் காரியத்துக்கும் அடிப்படையாக்கிய அண்ணல் காந்தியின் நினைவு தினத்தையொட்டி இம்மாநாட்டின் அறிக்கை வெளியாகியிருப்பது இருவிதப் பொருத்தமாகும்.

அணு சக்தி என்பது இன்றைய உலகின் ஒரு சாபக்கேடாகி விட்டிருக்கிறது. ஆக்க பூர்வமாகப் பயனாகும்போது கூட ஆபத்து அதிகம். அணுமின் நிலையங்களில் பயனற்றுப் போகும் அணு உலைத் தண்டுகள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குக் கதிரியக்க வீச்சு உள்ளனவாக இருக்குமாதலால் அவற்றை எவ்வுயிர்க்கும் தீங்கின்றி எப்படி ஒழித்துக் கட்டுவது என்பது பெரும் பிரச்னையாகியுள்ளது. அவ்வாறிருக்க அணு ஆயுதங்கள் திட்டமிட்டோ தவறுதலாகவோ பயன்படுத்தப் படுமேயானால்...?

அணுகுண்டு வீச்சினால் ஏற்படக் கூடிய உடனடி கஷ்ட நஷ்டங்களையும் நீண்ட காலத் துன்பங்களையும் ''தி டே ஆஃப்டர்'' என்ற டீ. வி. திரைப்படம் தத்ரூபமாகச் சித்திரிக்கவும் மேனாட்டு மக்கள் பெரும் பீதிக்கும் கவலைக்கும் உள்ளாகியிருக்கின்றனர். போதாக் குறைக்கு எல்லாம் தானியங்கு முறையில் நடக்கும் அமெரிக்காவில் அணு ஆயுதப் பிரயோகம் எந்தக் கட்டத்தில் எந்தச் சூழலில் நடக்கவேண்டும் என்று முடிவெடுக்கும் பொறுப்புக் கூட கம்ப்யூட்டரிடம் விடப்பட்டுள்ளது என்ற செய்தியானது மக்களைக் கலகலத்துப்போகச் செய்துள்ளது.

உலகெங்கும் மக்கள் இன்று விழிப்புற்று அணு ஆயுதங்களை ஒழிக்குமாறு போராடி வருகிறார்கள். ஆனால் தலைவர்கள் தடுமாறுகிறார்கள். தயக்கத்துக்குக் காரணம் சந்தேக உணர்வு. ருஷ்யாவை விட பலசாலியான பிறகு அதனுடன் பேச்சு வார்த்தை நடத்தினால் அது பணியும், வழிக்கு வரும் என்று அமெரிக்கா கருத, ருஷ்யாவும் அவ்வாறே நினைக்கிறது. விளைவு, மேன்மேலும் அணு ஆயுதக் குவிப்பு.

எனவேதான் ராஜாஜி அறிவுறுத்தினார்: ''எதிராளியை நம்பி ஒருதலைப் பட்சமாக அணு ஆயுதங்களைக் குறையுங்கள்'' என்று. ''நீ எஸ்.எஸ்.20—ல் இத்தனை குறை, பிறகு நான் பெர்ஷிங்கில் அதே அளவு குறைக்கிறேன்'' என்பதற்குப் பதில், ''நான் பெர்ஷிங்கில் இத்தனை குறைத்து விட்டேன். எனவே நீயும் எஸ்.எஸ்.20—ல் சம அளவு குறைப்பாய் என நம்புகிறேன்'' என்று சொல்லவேண்டும். இம்மாதிரிப் பேசிச் செயலாற்றும் துணிவு எந்தத் தலைவனுக்கு வருகிறதோ அவனே உலகை அணு ஆயுதப் போர் என்ற அபாயங்கரத்திலிருந்தும் சர்வ நாசத்திலிருந்தும் காப்பாற்றியவனாவான். அவனைச் சகல நாடுகளும் போற்றும்.

புதுதில்லியில் கூடிய தலைவர்கள் தனித்தனியே அணு ஆயுதங்கள் தயாரிக்கும் நாடுகளுக்குச் சென்று ஆட்சித் தலைவரிடம் அணு ஆயுதப் போட்டியின் வியர்த்தத்தை உணர்த்துவது என்று முடிவாகியிருக்கிறது. அணு ஆயுதச் சோதனைக்கு முடிவு கட்டுவது, விண்வெளி ஆயுதங்களை உற்பத்தி செய்யாதிருப்பது, அணு ஆயுதக் குவிப்பைக் குறைப்பது என்று படிப்படியாக நடக்க வேண்டுவனவற்றைப் பட்டியல் போட்டிருக்கிறார்கள். இது போதாது. ராஜாஜியின் செய்தி அணு ஆயுதக் குவிப்பு நாடுகளின் தலைவர்களுக்கு உணர்த்தப்பட்டு இரு வல்லரசுகளில் ஒருவரேனும் அதை ஏற்றுச் செயல்பட்டாலொழிய உலகுக்கு உய்வில்லை.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

# பதுமைகள் சொல்லிய படக்கதைகள் ④

இந்த முறை தியேட்டர் படியேறுகை யில் ஜெயமன்மதன் உள்ளத்தில் ஒரு தீர் மானம் குடிகொண்டிருந்தது. எனவே நான் காம் படிக்குக் காவலாகிய ஏகபோக மதன வல்லிப் பதுமை கைகொட்டிச் சிரிக்குமுன் ஜெயமன்மதன் சொன்னதாவது:

''ஹே! ஏகபோக மதனவல்லிப் பது மையே! என்னைக் கேள்விகளால் ஹிம்சிக் காமல் நீ சொல்லவரும் கதையிரண்டையும் சொல்வாயேயானால் அடுத்த வாரம் உங்கள் கேள்விகளுக்கெல்லாம் பதில் கூறி விளக்கும் வகையில் நான் உனக்கொரு கதை சொல் லும் எண்ணத்துடன் திண்ணமாக இப் படி யேறியிருக்கிறேன் என்பதால் நீ கதைகளைச் சொல்வாயாக எனவும்.

**நான்காம் படிக்குக் காவலாகிய ஏகபோக மதனவல்லிப் பதுமை சொல்லிய:**

## நல்லதம்பி

சிரிப்பு வரவேண்டும் என்பதற்காக உருவாக்கப்பட்ட படம் என்கிறார்கள். வெறும் நகைச்சுவைத் தோரணங்கள் மட்டும் கதை யாகாது என்பதால் — ஒரு எம். பி. ஏ. மாப்பிள்ளையை அடைய ஒரு துடுக்குப் பெண் எடுக்கும் முயற்சிகள், அவளைத் தோற்கடிக்க மாப்பிள்ளையும் அவன் அம்மா வும் நிகழ்த்தும் எதிர் நடவடிக்கைகள் எனத் தொடங்கிக் கல்யாண மாப்பிள்ளை வீட்டை விட்டு ஓடி இன்னொரு பெண்ணைச் சந்தித்து படிப்புக்காசுக் காதலித்து அது உண்மையாகி, அப்புறம் கொலை அது இது



என்று கராடி வித்தை எல்லாம் காண்பித்து கதை கடைசியில் — சுபம்.

கார்த்திக் ஃபாரின் ரிடர்ன் மாப்பிள்ளை. அவரை வரவேற்கப் பெண்களும், பெண்ணைப் பெற்றவர்களும் சேர்ந்து வீட்டில் காத் திருந்து அவரை அடையப் போட்டி போடு வது.

ராதா தெரு முனையில் நின்று காதலிக்கக் கூப்பிடுவது.

ஒரு ஜீப்பில் வலம் வரும் வில்லனைப் பார்த்துப் போலீஸ் கான்ஸ்டபிள் 'நீங்களா சார்?' என்று சல்யூட் அடித்து, அப்புறம் கான்ஸ்டபிளுக்கும் வில்லனுக்கும் என்ன சம்பந்தம் என்று நம் முடியைப் பிய்த்துக் கொள்ள வைக்கிறார்களே. அது—

எல்லாம் சினிமாவில் தான் நடக்கும்.

கார்த்திக் இப்போதெல்லாம் ஓரளவு நன்றாகவே அசடு வழியக் கற்றுக் கொண்டு விட்டார்.

மனோரமா — ஹாஜா ஷெரீப் 'கோஷ்டி உண்ணாவிரத செட்டப் பண்ணுவதும் அது புஸ்வாணமாவதும் பரவாயில்லை — அதுசரி, மனோரமாவா இது? எத்தனை நன்றாகப் பண்ணுவார். இதில் ஏன் ஊசியால் குத்தப் பட்ட ட்யூப் மாதிரி சுரத்தேயில்லாமல்...

மௌலி — இவர் டைரக்டராய், நாட காசிரியராய் கொடிகட்டியது என்ன? இதில் ஒரு சிரிப்புக் கணவனாய் வந்து சிரிப்பு வர விடாமல் கடைசி வரைக்கும் பார்த்துப் பார்த்துக் காப்பாற்றியது என்ன?

கல்லாப்பெட்டி சிங்காரம், காந்திமதி, ரவீந்திரன், சிவசந்திரன் ஆகியோர், ஆகி யோரும் நடித்திருக்கிறார்கள் பட்டியலில்.

இயல்பான நகைச்சுவைக்குக் குறிப்பிட்டுச் சொல்வதானால் ஒன்றைச் சொல்லலாம். சண்டைக் காட்சியில் ஒய். ஜி. மகேந்திரன் புரூஸ்லீ டைப் கராட்டே குங்ஃபூக்களை இமி டேட் செய்து கிண்டல் பண்ணுகிறாரே அது!

இந்தப் படத்தில் புதுமை; அனுராதா அவ்வளவாகக் காட்டாமல் ஆடுவதும் ராதா நேர் எதிராக ஆடுவதும் தான். அனுராதா ஜாக்கிரதையாக இல்லாவிட்டால் ராதா வந்துவிடுவார் அந்த இடத்திற்கு!

ராதா வழக்கம் போல் ஜிலுஜிலு என வருகிறார். ஆடுகிறார்; பாடுகிறார். அவ்வளவு தான்.

டிஸ்கோ பாட்டு கேட்கலாம் போல இருக்கிறது. மற்றவை கேட்க வேண்டாம் போல.

சிரிப்பாய்த் தொடங்கி அப்புறம் சிரிப் பாய்ச் சிரித்து விடப் போகிறதே என்று பயந்து பின்பாதியில் படு ஸீரியஸ்ஸாகப் போய் கொலை, அது இது என்று வளர்த்து மறுபடி சிரிப்பிலே முடிப்பதைப் பார்த்தால் சிரிப்புத்தான் வருகிறது.

**வெள்ளித்திரை**



## ஏகபோக மதனவல்லிப்பதுமை சொல்லிய பௌர்ணமி அலைகள்

ரொம்ப சிக்கனமான டைரக்டர். வீடு, கோர்ட் ரூம், ஜெயில் கம்பிகள் மறுபடியும் வீடு, என்று நாலைந்து செட்கள். பெரிய வக்கீல் ஐயா, அவர் பெண் வக்கீலம்மா, மாப்பிள்ளை சின்ன வக்கீலய்யா என்று ஆரம்பக் காட்சிகள்.

ஏதாவது பாத்திரத்துக்கு டைரக்டர் அட்வைஸ் கொடுக்க நினைக்கிறாரா, கூப்பிடு அந்த மனோவைத்தியர் சுமித்ராவை! தடால் தடாலென்று வீடு, கோர்ட், ஜெயில் என்று அந்த அம்மாள் பிரசன்னமாகி லெக்சர் கொடுப்பார்!

மேடைக்கு எழுதித் திரையேற்றிய மாதிரி இருந்தாலும் கதையம்சம் கொஞ்சம் ஸ்ட்ராங். சற்று இயல்பு தவறினாலும் வசனங்கள் கூர்மை. மூல ஜாடை புரிந்தாலும் இசை இனிமை.

வீட்டோடு மாப்பிள்ளை — சீனியர் வக்கீலுக்கு ஜூனியர் என்று இரண்டு தகுதிகள் சிவகுமாருக்கு. 'ராதா, ராதா' என்று கெஞ்சோ கெஞ்சுகிறார் அம்பிகாவிடம். 'கேஸ் தான் முக்கியம், நான் பார்க்க வேண்டிய பாயிண்ட்கள் வேறு இருக்கின்றன, தனியே போய்ப் படுங்கள்' என்ற ரீதியில் அம்பிகா அவரை கட் செய்ய, மனிதர் சொப்பனத்தில் டூயட் எல்லாம் பாடிவிட்டு டைப்ரைட்டரைக் கட்டிப்பிடித்துக்கொண்டு இச் இச்கள் தர, அம்பிகா வந்து அதட்டி எழுப்ப, 'நீ எப்ப டிரஸ் மாத்திக்கிட்டே?' என்று சிவகுமார் பரிதாபமாய்க் கேட்கும் இடம் கலகல.

தனியே பிராக்டிஸ் செய்து பிழைத்தால் தான் கௌரவம் என்று அவருக்கு உறைத்து மாமனாரை முறைத்து, மனைவியிடம் விறைத்து வெளியே வந்த பின்தான் அட்டகாச சிவகுமார். கோர்ட்டில் முதல்நாள், ''அந்த வக்கீலின் சார்பில் ஆஜராகும் குற்றவாளி நான் தான் யுவர் ஆனர்'' என்று அவர் உதறிக் கொட்டி ஆரம்பித்து அசடு வழிவது ஒரு பக்கம். காரசாரமாய்க் கேள்விகளை அடுக்கி குறுக்கு விசாரணை செய்வது ஒரு பக்கம். குற்றம் சாட்டப்பட்ட ரேவதியை மனத்தில் வைத்து எண்ணங்களை ஊஞ்சலாட்டுவது, ஒரு பக்கம். சிவகுமாருக்கு இவ்வளவு நீனி.

அம்பிகா, ரேவதி எல்லாம் 'வெறுமனே' வசனங்களைத் துப்புவதோடு சரி. மேஜருக்கும் மைனர் ரோல்தான்.

இன்னும் கொஞ்சம் ஆக்ஷன் இருந்திருக்கலாம் என்று நினைக்கும் வகையில் வளவளவென்று பேச்சு, பேச்சு, பேச்சு. (ஏகப்பட்ட வக்கீல் பாத்திரங்களாலா?)

வளர்பிறை தான். பௌர்ணமிக்கு இன்னும் கொஞ்சம் யோசிக்க வேண்டும். டைரக்டர் சார், அடுத்த படத்தில் கைவரிசையைக் காட்டுங்கள்!

• • •

அடுத்த வாரம் வரை பொறுத்திருங்கள். இந்தப் பதுமைகளுக்கு ஒரு முடிவு கட்டலாம் —

-ஜெயமன்மதன்

## வட்டமேஜை

● இந்தியாவின் இந்திரா கட்டுரைத் தொடரைப் படித்தேன். சிந்திக்கத் தூண்டும் வகையில் சிறப்பாகவும் மனத்தில் பதியும் வகையில் சற்றுக் கனமாகவும் இத்தொடரைப் படைத்திருக்கிறார் மாலன்!
அயன்புரம்,
த. சத்தியநாராயணன்.

● நிர்வாணக் காட்சிகளைப் பார்த்து ரசிக்க தியேட்டர் கதவுகளை உடைத்துக் கொண்டு பலர் அத்துமீறி நுழைந்ததைப் பற்றி ஜெயமன்மதன் குறிப்பிட்டுள்ளதைப் படித்தபோது — "*The only good Indian is a dead Indian*" என்று ஆங்கில எழுத்தாளர் ஆர். பி.ஷெரிடான் கூறியதுதான் என் நினைவுக்கு வந்தது.
சென்னை-79 ச.கே.ஜெயந்தி

● சக வாசகர்களின் 'ஏமாறாதே' அனுபவங்களைப் படித்ததும் எச்சரிக்கை உணர்வு மிகவும் பெற்றோம்.
சென்னை—14,
ஐயாறு எஸ். வாசுதேவன்.

● நம் நாட்டில் தொழில் வளம் பெருகவும், இளைஞர்களின் எதிர்கால வாழ்வு சிறக்கவும் டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி எடுத்துரைத்த உன்னதமான கருத்துக்கள் பொன்னேட்டில் பொறிக்கப்படவேண்டியவை.
லால்குடி, எம்.ராஜேந்திரன்

● "ஆள்கிறீர்களா? விளையாடுகிறீர்களா?" கல்கியின் தலையங்கம் மிக அற்புதம். மிகக் கேவலமான முறையில் அரசியல் நடத்திக் கொண்டிருக்கும் ஆளும் கட்சியினருக்கு ஒரு சரியான சூடு. நல்ல மாட்டிற்கு ஒரு சூடு! எதிர்க்கட்சிகளின் எதிர்காலம் பற்றிய இரா. செழியனின் கட்டுரை நாட்டின் உண்மை நிலையை உணர்த்துகின்றது.
துடுப்பதி
எம். பி.ரங்கநாதன்.

● இன்றைய தலையாய பிரச்னையான கல்விக்கும் வேலை வாய்ப்புக்கும் அதிக முக்கியத்துவம் அளித்து நாட்டின் உடனடித் தேவையையாவது பூர்த்தி செய்ய ராஜீவ்காந்திக்கு தங்களின் (தலையங்கம்) வேண்டுகோளை ஒவ்வொரு இந்தியனும் வரவேற்பான்.
திருப்பூர்—4.
துரை. ராஜேந்திரன்.

● 'இந்திய டாக்டரின் இலக்கியப் பயணம்' அருமையாயிருந்தது. பாராட்டுரை வித்தியாசமாகவும், அழகுடனும் அமைந்திருந்தது.
திருவாரூர்—2,
ஆரூர். பாஸ்கரன்.

● எங்க வீட்டுக்காரர் ஒரு 3—டியில் ஒரு நல்ல குடும்பக் காட்சியைக் கொடுத்திருந்தார் கோவை அனுராதா.
கிருஷ்ணகிரி ஆர். பூபாலன்

● கலைஞர் மட்டுமின்றி என். டி. ஆர். — பருக் — போன்ற அனைவரும் மாநிலத் தலைவர்களாக விளங்காமல் தேசியத் தலைவர்களில் ஒருவராகவிளங்கி அனைத்து மாநிலங்களுக்கும் தங்களுடைய பணியை விரிவபடுத்த வேண்டுகிறேன்.
திருமங்கலம்,
வீர. ஜீவாபிரபாகரன்.

● 5—சு பஸ்ஸில் பெசன்ட் நகர் பஸ் நிலையத்திலிருந்து மாலை 3.20—க்கு வடபழனி சென்றேன். சண்டக்டரிடம் 10 ரூ. நோட்டு கொடுத்து மூன்று டிக்கட்டுகள் வாங்கினேன். அவர் மீதம் ரூ. 7.30 என்னிடம் கொடுத்த சமயம் ஒரு நோட்டுத் தவறி கீழே விழுந்து காற்றினால் அடித்துச் செல்லப்பட்டு ரோட்டில் பறந்து விழுந்தது. சண்டக்டர் பஸ்ஸை நிறுத்தி வெகுதூரம் ஓடி அந்த நோட்டை எடுத்து வந்து என்னிடம் கொடுத்தார். அவரை மற்ற கண்டக்டர்களுக்கு முன் உதாரணமாகக் கருதிப் போற்றுகிறேன்.
அம்பலமேடு,
எஸ். லக்ஷ்மி நரசிம்மன்.



# இந்தியாவின் மிகப் பெரிய ஏமாளி

● ரூ. 5700 போட்டு கருப்பு வெள்ளை டி. வி. வாங்கியவனைப் போல மகா ஏமாளி (நான் உள்பட) இந்தியாவில் இருக்க முடியாது. ஆரம்பமே கலர் ஒளி பரப்பு இருந்திருந்தால் ஒருமாதிரி சமாளித்திருக்கலாம். இப்பொழுது உள்ளதை விற்கமுடியாமல் (ரூ. 1500க்குக் கேட்கிறார்கள்) கலரும் வாங்க முடியாமல் (ரூ. 8000) இருதலைக் கொள்ளி எறும்பு போல் ஆகிவிட்டது. ஆரம்பத்திலேயே உறுதியான கொள்கை இல்லாமல், நடுத்தர வர்க்கத்தினரைக் கூட சக்திக்கு மீறிச் செலவு செய்ய வைத்து ஏமாளியாக்கி விட்டு, இப்பொழுது டி. வி. கம்பெனிக்காரர்கள் எல்லாம் எப்படி லட்சாதிபதிகளாகி விட்டார்கள் என்று கமிட்டி வைக்கிறார்களாம்! இதன் நடுவில் ஸர்வீஸ் ஸெண்டர் என்று சொல்லி கம்பெனிக்காரர்கள் 50-ம் 100-ம் அடிக்கிற கொள்ளை.
விழுப்புரம்—2.
கே. எஸ். குமார்.

(கடைசிக்கடிதம் பரிசுபெறுகிறது







# அமிர்தாஞ்சன் அறியும் உடல்வலி மற்றும் சுளுக்கின் கடுமையை



எளிதாகப் பூசிட ஏற்ற மிருதுவான அடிப்படைபொருள் கொண்டது.

புத்தம் புதிய, காக்கிறுலான உள் அமைப்பு மருந்தின் சக்தியைப் பாதுகாக்கிறது.







1984 ஒலிம்பிக் போட்டி இந்திய விளையாட்டு வீரர்களுக்கு பெய்ன்-பாம் சப்ளை செய்ய அங்கீகாரம் பெற்றவர்கள்

# அமிர்தாஞ்சன்

துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது.

தீய பின்விளைவுகள் இல்லாதது.

OBM 8777 TM

## 17

## உன்னையும் என்னையும் சேர்த்தது விதி!

**த**ன் முன் நிற்கும் இளம் பெண் பொம்மராஜபாளையம் இளவரசி என்று தெரிந்ததும், ஆர்க்காட்டு கோட்டைக் காவல் தளபதி குலி கான் அவளை உடனே ஆசனத்தில் அமர்த்தி ராஜ உபசரணைகள் செய்தான். அவளிடமிருந்து விவரங்கள் தெரிந்த பிறகு, ''ஆகா, ஆபத்தில் சிக்கி இருக்கிறீர்களே! இருங்கள்! எங்கள் நவாபுக்குச் செய்தி அனுப்புகிறேன்'' என்று சொல்லி, அவளுக்குத் தனிக் கூடாரம் அடித்து அதில் அவளைத் தங்க வைத்தான்.

செஞ்சுகா பகலெல்லாம் மனம் புழுங்கினாள். 'எங்கேயோ போக வேண்டியவள் எங்கேயோ வந்து விட்டோமே, இது புதுச் சிக்கலை உண்டாக்கும் போலிருக்கிறதே!'' என்று நினைத்து, அந்தி விழுந்த தருவாயில் கூடாரத்திலிருந்து எட்டிப் பார்க்க,

வெளியே உள்ள கரம்பை மேட்டில் அடர்ந்த கிளைகளோடு வளர்ந்திருந்த நாவல் மரத்தின் கீழ் வர்மன் அமர்ந்திருப்பதைப் பார்த்தாள்.

கூடாரத்தை விட்டு வெளியே வந்து சுற்றிவர நட்டிருந்த கோரைப் புல் வேலிக்கு அருகே நின்று, ''வீரரே!'' என்று மெள்ள அழைத்தாள்.

வர்மன் ஒருகணம் திகைத்து அங்குமிங்கும் பார்த்து, செஞ்சுகாவைக் கண்டு மெள்ள எழுந்து வந்து வேலிக்கு அப்பால் சற்று எட்டத்தில் நின்றான்.

சிவந்த விசிறியாக அந்தி ரேகை விரிந்து கொள்ள,

குங்குமம் பொட்டுத் தைத்தாற்போல் இரு குறு நட்சத்திரங்கள் சுருக்கென்று பிறந்து மின்னத் தொடங்கின.

செஞ்சுகாவை அந்த நிதானத்தில் பார்த்ததில்லை. சுறுசுறு என்று நெருப்புப் பொறி போல் துள்ளிக் கொண்டிருப்பாள். கண்கள் இரண்டும் சென்னை ஜோடி போல் நொடி நேரம் சும்மா இராது.

இங்கே எப்படி இப்படி நிதானத்தில், அமைதியில் சலனமின்றி இருந்தாள்!

கண்கள் ஆகாயம் போல் விரிந்து அவனை நோக்கி இருந்தன.

எங்கும் மெல்லிய பட்டுப் போன்ற ஒளி உதிர்ந்திருக்க, அவள் அந்தக் கூடாரப் பின்னணியில் சித்திரம் போல நின்றாள்.

''இளவரசி!'' என்றான் அவன்.

செஞ்சுகா ஒரு நீண்ட மூச்சை விட்டு விட்டு, ''வீரரே! வாழ்க்கையைப் பார்த்தீர்களா?'' என்றாள். வார்த்தைகள் சோகத்துடன் கனமாக வந்தன. ''எங்கேயோ போக நினைத்தேன். எங்கேயோ அகப்பட்டிருக்கிறேன்'' என்றாள்.

''வருந்துகிறேன் இளவரசி! இந்தக் கதிக்கு உங்களை ஆளாக்கி விட்டேன். நான் மட்டும் தங்கள் பரிசலைக் கடத்திக்கொண்டு போயிரா விட்டால்....?''

''அதுதான் விதி, வீரரே! விதி என்பது வெறும் இரண்டு எதிர்பாராத சம்பவங்களின் சந்திப்பு அல்ல. காலத்தைத் தோண்டிப் பார்த்தால் எத்தனையோ அடுக்கு அடுக்கான சம்பவங்கள் நிகழ்ந்து இந்த விதிச் சம்பவமாகப் பரிணமித்து விடுகிறது. நினைத்துப் பாருங்கள். நவாப் பதவிக்கு ஏன் போட்டி வரவேண்டும்? வெள்ளைக்காரர் நம் நாட்டை ஏன் தேடி வரவேண்டும்? வந்தவர்களை இரு நவாப்களும் ஆளுக்கொரு வெள்ளைக்கார இனத்தை ஏன் உதவிக்கு ஏற்றுக் கொள்ள வேண்டும்? இங்கிலீஷ்காரர்கள் ஏன் என்னைப் பணயமாகக் கேட்க வேண்டும்? அப்படிப் பணயமாகப் போகிற இடத்தின் வாசல் வரை வந்து விட்டு நான் ஏன் இந்த ஆர்க்காட்டுப் படையிடம் சிக்க வேண்டும்? வீரரே! விதியைத் தோண்டிக் கொண்டு போனால் பிரபஞ்சத்தின் ஆரம்பம் வரை போய்விடலாம்! ஒன்றின் மேல் ஒன்று சார்ந்து இருக்கிறது வீரரே!'' என்றாள் அவள்.

அவள் சொல்லும் வார்த்தைகளை ஆச்சரியமான கவனமுடன் கேட்டான் அவன்.

கல்வி, கேள்விகளில் செஞ்சுகா சிறந்தவளாக இருக்க வேண்டும். ஒரு ஞானியைப் போலத் தத்துவம் பேசுகிறாளே!

''இளவரசி! நடந்ததெல்லாம் தான் விதி! நடக்கவிருப்பது நம் கனவு!'' என்றான் நிதானமுடன்.

செஞ்சுகா அவனை ஆழ்ந்து பார்த்தாள். அவள் விழியில் கூட ஆச்சரியம் துள்ளியது. வர்மனை அதிசயப் பார்வை பார்த்து,

''வீரரே! நீங்களும் நிறைய நினைக்கிறீர்கள் போல இருக்கிறதே! ஒன்று பார்த்தீர்களா? நீங்களும் நானும் சந்தித்தது கூட விதி! என் குறவஞ்சி நடனத்தை பார்த்துத் தாங்கள் ஆவேசப்பட்டது, காவலை மீறி என்னைக் காப்பாற்ற வந்தது, பரிசலைக் கடத்தியது எல்லாம் நினைத்தாலே விதி தான்! தந்தையைத் தேடி எங்கேயோ போகிறவர், எங்கேயோ அகப்பட்டு....''

# மோகினி திருக்கோலம்




அவன் வார்த்தைகளை மென்மையாக்கிக் காற்றில் விட அவன் மனமும் அவள் சொல்வதை எல்லாம் கேட்டுத் தத்தளித்தது.

உண்மையில் எங்கே போக வேண்டியவன் அவன்! தந்தையைத் தேடிப் புதுச்சேரிக்குப் போக வேண்டியவன்! ஆனால் அவனது உணர்ச்சிகள் அவனை எங்கெங்கே இழுத்து வந்து விட்டன!

போகும் இடமெல்லாம் ஏதோ ஓர் உணர்ச்சியில் சிக்கிக் கொள்கிறான். அதனால் அங்கங்கு வாழ்க்கை வாகனத்தைத் திருப்புகிறான். இங்கே வந்து இந்த இளவரசியிடம் பேசிக் கொண்டிருப்பது கூட அவனை அறியாமல் மனதில் பிரவாகமாக எழுந்துள்ள உணர்ச்சிதானே! ஆமாம்! இதுவும் உணர்ச்சிதான். இதற்கு ஆட்பட்டுத்தானே இதுவரை நினைத்தறியாத ஆர்க்காட்டு வாசலை அவன் மிதித்திருக்கிறான். இல்லாவிடில் ஏன் இங்கே வரப்போகிறான்?

இன்னொன்று! இந்த உணர்ச்சியில் நூதனமாக ஒன்று பார்க்கிறான். இந்த உணர்ச்சி ஆனந்தமாக இருக்கிறது. இன்பமாக இருக்கிறது. உற்சாகமாக இருக்கிறது. மனத்தின் எல்லா நுணுக்குகளிலும் சென்று பரவசமாக நிரம்புகிறது. எங்கேயோ மிதப்பது போல இருக்கிறது.

அது மட்டுமல்ல. இதை அனுபவிக்கும் போது மேலும் மேலும் இதில் இணைக்க வேண்டும் போல இருக்கிறது. வேறு எதைப் பற்றியும் கவலைப்படத் தோன்றவில்லை.

ஒரு பெருமூச்சுடன் அவன் சொன்னான், ''இளவரசி! தங்களைச் சந்தித்ததும், தங்களுக்கு உதவி செய்ய நான் முன் வந்ததும் விதியானால் இந்த விதியைப் பெரிதும் போற்றுகிறேன் இளவரசி!'' என்றான் அவன்.

''தெரியும் வீரரே! உங்களுக்கு நாட்டுப் பற்று நிறைய இருக்கிறது என்று! இல்லாவிடில் இப்படி இந்த அன்னியர்களிடமிருந்து என்னைக் காப்பாற்ற முற்படுவீரா? வீரா வேசத்துடன் எழுவீரா?'' என்றாள் அவள்.

'வெறும் நாட்டுப் பற்று மட்டுமல்ல' என்று சொல்ல வாயெடுத்தான் அவன்.

ஆனால் வேறு என்ன அது என்று சொல்ல அவன் அதை இனம் பிரிக்க வில்லை. சிறிது மௌனமாக இருந்தான்.

பிறகு, ''இளவரசி! இப்போது கூட நீங்கள் சொல்லலாம்! இந்தக் கணமே உங்களை விடுதலை பண்ணி உங்கள் தந்தை யாரிடம் சமர்ப்பிக்கிறேன்'' என்றான் அவன்.

''அப்படிச் செய்தால் எல்லாம் முடிந்து விடுமா, வீரரே?'' என்று கேட்டாள் அவள்.

''இல்லை, இளவரசி! தங்களுக்கு ஏற்படும் இந்தக் கஷ்டங்களாவது குறையாதா? அரண்மனையில் வாழ வேண்டியவள் இப்படியா ஆற்றங்கரை ஓரம் ஒரு துணிக் கூடாரத்தில் வாழ்வது? இந்தத் துயரங்களை நீக்கத்தான்...''

''நீங்கள் அப்படி நினைப்பது எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது, வீரரே! எனினும் தாங்கள் நினைப்பது போல் இது எனக்குத் துயரம் அல்ல! தந்தை சொல்லையும், குடும்பத்தின் கீர்த்தியையும் காப்பாற்ற வேண்டி ஏற்றுக் கொள்ளும் கஷ்டங்கள் துன்பங்களே அல்ல! நம் மனத்திலேயே கஷ்டங்களை இன்பமாகவும் மாற்றலாம், துன்பமாகவும் மாற்றலாம் வீரரே! வைணவர்கள் சொல்வதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?''

''என்ன இளவரசி?''

''அகப்பட்டிருக்கிறோம் என்று நினைப்பதைவிட, ஆட்பட்டிருக்கிறோம் என்று நினைப்பதுமேல்.''

''இது என்ன தத்துவம் இளவரசி?''



''இந்த உலகில் 'அகப்பட்டிருக்கிறோம்' என்று நினைத்தால் எல்லாமே அல்லலாகத்தான் தோன்றும். அதைவிட்டு உலகமே கடவுளின் லீலை. இதில் நினைத்து அவனுக்கு ஆட்பட்டிருக்கிறோம் என்று நினைத்தால் எல்லாமே ஆனந்தமாகிவிடும். வெறும் நினைப்பிலேயே ஒன்றை இன்பமாகவும் துன்பமாகவும் மாற்றிவிடலாம் வீரரே!''

அவள் சொல்லைக் கேட்டுப் பிரமித்து நின்றான் அவன்! அது உண்மைதானே! இப்போது அவனே பல சங்கடங்களில் அகப்பட்டிருக்கும்போது, அத்தனையும் அவளுக்காகத்தானே என்று நினைக்கும் போது, எப்படித் துன்பம் உறுத்தாமல் மறைந்து இன்பம் மட்டுமே ஜனிக்கிறது!

ஏதோ சொல்ல வாயெடுத்தான். ஆனால் அந்தி நேர ரோந்துக்கு குலிகான் வருவதைப் பார்த்து மௌனமாகி விட்டான் அவன்.

மறுதினம் காலையில் ஏற்கெனவே போட்டிருந்த திட்டத்தின்படி ராபர்ட் கிளைவின் நூறுபேர்ப் படை திடீரென்று கோட்டையை விட்டு வெளியே வந்து ஊருக்கு வெளியே இருந்த ஆர்க்காட்டுப் படையை மின்னல் தாக்காகத் தாக்கியது.

லாம்பர்ட்டும், சங்கர்ராவும் அதில் பங்கு பெற்றார்கள். அரை மணி நேரம் மட்டுமே போர் நிகழ்ந்தது. கிளைவ் படையில் பன்னிரண்டு பேரும், ஆர்க்காட்டுப் படையில் 26 பேரும் உயிர் இழந்தார்கள். அரைமணி முடிந்ததைக் குறிக்கும் தம் பட்டம் ஒலிக்க, கிளைவ் படை உடனே திரும்பிக் கோட்டையை நோக்கிப் பறந்து விட்டது. இரும்பவும் கோட்டைக் கதவுகள் அடைக்கப்பட்டன.

கிளைவ் அன்று மாலையில் தமது ஆலோசனைக் கூட்டத்தைத் தொடங்கிய போது, அவரிடம் கோட்டை உளவு வழியே வந்த கடிதம் கொடுக்கப்பட்டது.

ஜான் ஸாவேஜ் அதை எழுதியிருந்தார்.

''பொம்மராஜுப் பாளையம் இளவரசி செஞ்சுகாவைத் திருப்பதிப் பணத்திற்காகப் பணயம் எடுத்துக் கொண்டு வரும்போது, செஞ்சுகாவை ஒரு இந்திய வீரன் கடத்திப் போய்விட்டான். தற்சமயம் அவர்கள் இருவரும் ஆர்க்காட்டுப் படையில் சரண் புகுந்திருப்பதாக உளவுச் செய்தி! கிளைவ் உடனே அந்தப் படையுடன் சண்டை போட்டு இளவரசியை மீட்டுக் கொள்ள வேண்டும். அவசரம் மட்டுமல்ல, இது அவசியம்.''

கடிதத்தை மடித்து வைத்தான் கிளைவ். பிறகு அதன் விவரங்களைக் கூட்டத்தில் தெரிவித்தான்.

எல்லோரையும் பார்த்து, ''உங்கள் முடிவு என்ன?'' என்றான் கிளைவ்!

''நிச்சயம் அந்தப் பெண்ணை மீட்டுக் கோட்டைக்குள் கொண்டுவர வேண்டும். சந்தாசாகிப் கையில் அகப்பட்டால் ஆபத்து'' என்றார்கள்.

''அப்படியானால் நாளை காலை தாக்குதல்!'' என்றான் கிளைவ்.

''அதுவே சரி'' என்றார்கள் அவர்கள்.

''மிஸ்டர் மார்கன் மோரிஸ்! அப்போ நீங்கள் நாளை போகிறீர்கள்'' என்றான்

கிளைவ் ஒரு இளைய தளகர்த்தரை நோக்கி, "உங்களோடு ஏழு தளபதிகள் வருகிறார்கள். அதே நூறு பேர்ப் படை தர முடியும்."

"வெற்றி நிச்சயம்!" என்றான், மோரிஸ் புன்னகையோடு.

மறுநாள் காலை திடீர் என்று வெளிப்பட்டு அந்த 100 பேர் சேனை ஆர்க்காட்டுப் படையைத் தாக்கியது.

ஏற்கெனவே முதல் நாள் அனுபவத்தில் குலிகான் எச்சரிக்கையாக இருந்தான்.

கிளைவ் அனுப்பும் படைகள் மிகச் சிறிய படையே என்பதை அவன் புரிந்திருந்தான்.

எனவே அவர்களை வளைப்பதற்கு யோசனை கூறியிருந்தான்.

இந்த முறை கிளைவ் படை வந்ததும், ஆர்க்காட்டுப் படை தைரியமாக எதிர்த்தது.

சண்டை தொடங்கிய சில நிமிடங்களில் ஒரு தயாரான பகைவனைச் சந்திக்கிறோம் என்பதை மோரிஸ் உணர்ந்தான்.

போர் இந்த முறை விறைப்பாக நடந்தது. வாளும் ஈட்டியுமே அதிகம் உபயோகப்படுத்தப்பட்டன. கால் மணி நேரத்தில் இரண்டு வெள்ளைத் தளபதிகளும் இருபத்திரண்டு கிழக்கிந்திய கம்பெனி சிப்பாய்களும் இறந்து விட்டார்கள். ஓரளவு அதைப் புரிந்த மோரிஸ் மனம் கலங்கினான்.

இருந்தும் விடாது, செஞ்சுகானின் கூடாரத்தையே குறிவைத்து, அவனும் அவனது சகாக்களும் முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு கந்திரத்தில் இரண்டு வெள்ளைத் தளபதிகளும் அவர்களின் ஒரு இந்தியச் சிப்பாயும் செஞ்சுகானின் கூடாரத்தின் சமீபம் போய்விட்டார்கள்.

யாரோ ஒருவன் கூக்குரல் கொடுக்க, வர்மன் திடீரென்று உஷாராகி எழுந்திருந்தான்.

கை வாளைத் தூக்கியது.

வருகிறவர்களை வர்மன் ஆவேசத்தோடு சந்தித்தான். கை ஒரு சூறாவளி போலச் சஞ்சரித்தது. சண்டை தொடங்கிய ஐந்தாம் நிமிடம் ஒரு வெள்ளையன் கீழே விழுந்தான். அடுத்தவன் தாக்குப் பிடிக்க, அவனுக்கும், வர்மனுக்கும் உக்கிரப் போர் நடந்தது.

வாட்கள் இயந்திர சதியில் ஒன்றை ஒன்று மோதின, தாக்கின, வெட்டின.

"உதவி! உதவி!" என்று வெள்ளைத் தளபதி அப்போது கத்த, உடனிருந்த இந்தியச் சிப்பாய் மற்றவர்களை அழைக்க ஓடினான்.

வெள்ளைத் தளபதியை ஓடவிடா வண்ணம் வர்மன் வளைத்துச் சுற்றித் தாக்குதலைக் கணத்துக்குக் கணம் ஏற்றிக் கொண்டே போக,

கூடாரத் திரையை விலக்கி செஞ்சுகா வெளியே வந்து அந்தத் துவந்த யுத்தத்தைப் பார்க்க ஆரம்பித்தான்.

வர்மனா இவ்வளவு அழகாகச் சண்டை செய்கிறான்.

விழிகள் விரியப் பார்த்தான் அவன்!

(தொடரும்)



# வட்டத்துக்குள் வட்டங்கள்

## உமா மஹேஸ்வரி

கதவைத் திறந்த தேவகிக்கு பெரிய ஆச்சரியம்.

அவனை, அப்பொழுது நினைத்துக் கூடப் பார்க்கவில்லை. முகத்தை நிமிர்த்தி அவன் நின்ற நிலை — அவளை ஆத்திரமடையச் செய்தது.

எதற்காக வந்திருக்கிறான்? .....

அதுவும் இத்தனை நாட்களாய் இல்லாமல் — இன்று வீடு தேடி வந்திருக்கிறான். காரிய வாதியாயிற்றே அவன்...

எந்த உதவியானாலும் அவள் செய்யப் போவதில்லை. இனி அவள் உடலில் வலிமையே இல்லை. காற்றில் அலையும் கொடியாய் அவள் மனம் துவண்டு போயிருந்தது.

கணவரின் மறைவின் வலியை இந்த ஒரு மாத காலப் பொழுது மெதுவாக மறக்கச் செய்து கொண்டிருந்தது.

இப்பொழுது போய் இவன் எதற்காக வந்தான்?...

உடன் பிறந்த ஒரே அண்ணன் — அவனைத் தோளிலும், மார்பிலும் தாங்கி வளர்த்த அண்ணன் — பாசத்தைத் தவிர வேறு எந்த உணர்வும் தெரியாத அண்ணன் — பத்தாண்டு வயது வித்யாசத்தில் பிறந்த உடனே தாயை இழந்தவன் என்ற பச்சாதாபத்தில் சில வருடங்களில் தந்தையையும் இழந்து அனாதையாகிப்போன தருணத்தில் தம்பியைத்தன் மகனாய் எண்ணிப் பாசத்தைப்பொழிந்த அண்ணன்.

அத்தகைய அண்ணன் வியாதியில் துடித்த போதும் கண்டும் காணாதிருந்தான் சங்கர்.

இப்பொழுது ஏன் வீடு தேடி வந்திருக்கிறான்?

''மன்னி.... கனிலே, இங்க... தெருகோடியில் இருக்கிற ஸ்கூல்ல சேர்த்து இருக்கேன்..''

''யாருப்பா கனில்.....''

'' எம் பையன்...'' என்றான்.

'' ஓ... உனக்குக் கல்யாணமாயிடுத்து இல்லே... மறந்து போச்சு...''

''ம்... நிஷாக்கு டியூடிமுடிய சாயங்காலம் ஆறு மணி ஆயிடும். எனக்கும் ஐந்து மணிக்கு முன்னால் ஆபீஸ்லேயிருந்து வர முடியாது. கனிலுக்கு அரை வேளைதான் ஸ்கூல்..... அதனால் அவன் இங்கேவந்து இருக்கட்டும்..., நீங்கதான் அவனை, என்னைக் கவனித்துக் கொண்ட மாதிரி கவனிக்க முடியும்...''

நீளமாய்ப் பேசிக் கொண்டே போனான் சங்கர்.

'என்னாலே முடியாது...' என்று சொல்லிவிட்டுத் திரும்பிப் பாராமல் உள்ளே சென்று விட வேண்டுமென முடிவெடுத்தாள்.

அவள் வாய் திறக்கும்போது...

உள்ளிருந்து வந்த அந்தப் பெரிய ஓசையில் திடுக்கிட்டு, ஓசை வந்த திக்கை நோக்கி விரைந்தனர் இருவரும்.

எப்படி நடந்தது இது?

பிரமித்துப் போய் நின்றவளின் கண்முன் காட்சிகள் நீண்டன.

''தேவகி... என்னது இது... திடீர்னு இன்னிக்கு எனக்கு நெய் குத்தறே... சங்கருக்கு வேண்டாமோ...மாசக்கடைசி வேற... நெய் பாத்திரம் காலியாயிடுத்து... உனக்கு மூளை கீளை கலங்கிப் போயிடுத்தா என்ன...''

'' நாலு நாளா பார்க்கறேன். புகஞ்சு, புகஞ்சு இருமறங்கோ. உடம்பு சூடாயிருக்கும். இரண்டு நாள் நீங்க நெய் குத்திக்கோங்க... அவன்தான் தினமும் சாப்பிடறானே....''

''மூடுடி வாயை... படிக்கிற பிள்ளை.... அவனுக்கு இல்லாத சௌகரியம் எனக்கு எதுக்கு....? நாளைலேந்து இந்த மாதிரி காரியம் பண்ணாதே....'' தம் தகுதிக்கு மீறி அவனைப் படிக்க வைத்தார் கணேசன்.

அன்றொரு நாள் —

தேவகி சங்கரின் உடையைத் துவைக்கும் போது, கிடைத்தவற்றை எடுத்துக் கொண்டு போய்க் கணவரிடம் காண்பித்தபோது — அவர் கலங்காமல் இருந்தார்.

''என்னது இது, இப்படிப் பேசாம இருக்கிங்க... எத்தனை சினிமா டிக்கெட்டுகள்... இதப் பார்த்திங்களா...சிகரெட் பெட்டி... ஒரு கேள்வி கேட்கக்கூடாதுஅவனை?...வயசுப் பையன் இப்படிக் கெட்டுப் போறானே...''

'' என்ன கேக்கணும்கறே... இதுக்கெல்லாம் அவன் என்கிட்ட 'பர்மிஷன்' வாங்கிண்டுட்டான்...''

சங்கரின் படிப்பு முடிந்ததும், அவனே பரபரக்காதபோது கணேசன் வரிசையாகப் பல அப்ளிகேஷன்களை அவனுக்காகப் பூர்த்தி செய்தார். சங்கர் எல்லாவற்றிலும் கையெழுத்திட்டான். அதைத் தவிர வேறு வேலை இல்லை அவனுக்கு.

சில நாட்களாகவே தேவகி அவரைக் கவனித்துக் கொண்டு வந்தாள். ஓயாத இருமலும், களைத்த உடலும், உடலில் ஒரு கதகதப்பும் — எதுவோ வித்தியாசமாகப்பட்டது.

முதலில் சாதாரண களைப்பு என்று அலட்சியப்படுத்தியவர், தன்னால் இயலாத நிலை வந்தவுடன் மருத்துவரை நாடினார். பல பரிசோதனைகளுக்குப்பின் நோயின் தீவிரத்தைச் சொல்லி, மருத்துவமனையில் சேருமாறு கூறினார் டாக்டர். செலவுக்கு? அவள் கையில் தேய்ந்து போய் வளையென்ற பெயரில் இருந்தவை அவளுக்கு உதவின.

கையில் கிடைத்த அந்த ஆயிரம் ரூபாயை பீரோவில் வைத்துவிட்டுத் திரும்பும்போது, அவசரமாய் உள்ளே வந்த சங்கர் –

''அண்ணா... டெல்லிலேருந்து ஒரு இண்டர்வியூ கால் வந்து இருக்கு...'' கார்டை நீட்டினான்.

''பெரிய கம்பெனியாச்சே... இங்கே வேலை கிடைக்குமா, உனக்கு...''

''இந்தக் கம்பெனி மேனேஜிங் டைரக்டரோட பையன் என் கிளாஸ் மேட்.... ஹெல்ப் பண்றேன்றான்...''

''அப்ப விடாதே, சான்ஸ.. தாராளமா புறப்படேன், ஏன் தயங்கறே .?''

''அதுக்கில்லே. அண்ணா... இண்டர்வியூவுக்குப் போட்டுண்டு போக ஒரு சூட்வேணும், டெல்லிக்குப் போய்வர ரயில் சார்ஜ்வேற... அவா டி.ஏ. குடுப்பா.... ஆனாலும் நாம முன்னால் செலவு பண்ணிட்டு க்ளெயிம் பண்ணணும்.... சூட், தையல் செலவு உட்பட ஐந்நூறு ரூபா ஆகும்...''

''ரயில் சார்ஜ்.... கைச்செலவு இப்படி எல்லாம் சேர்த்து ஆயிரம் ரூபா போதுமா?.''

''ஓ தாராளமா...''

''ரெண்டு நாள்ள சூட் தெச்சு குடுப்பாளு...''

''ஒரே நாளில் குடுத்துடுவான் அண்ணா. கொஞ்சம் பணம் ஜாஸ்தி அதான்.''

''தேவகி..பீரோலவெச்ச அந்தபணத்தைக் கொண்டு வந்து சங்கர் கிட்டகுடு...'' தேவகியின் வயிற்றிலிருந்து ஒரு உணர்ச்சி உருண்டு வந்து வாயில் சிக்கி அவளை மேலே பேச முடியாமல் செய்தது.

700 ரூபாய் சூட்டில் ஜொலித்த தம்பிக்கு வேலை கிடைத்து விட்டதில் அவருடைய – மனம் – இருமல் தொல்லையையும் சற்று மறந்து – ஆனந்தித்தது.

தம் உடல் நிலையையும் பொருட்படுத்தாமல் டில்லி செல்ல முடிவெடுத்து விட்டார் கணேசன். டில்லியிலிருந்து ஒரே வாரத்தில் திரும்பியவர் தம்பி வாழும் செல்வச் செழிப்பைப்புகழ்ந்து பேசினாலும் – அதென்ன அந்தக் சஞ்சலில் ஒரு அடிபட்ட சோகம்?

தேவகிக்கு அவரைக் கேட்க வேண்டும் என்று தோன்றினாலும், அவரை மீண்டும் சலனப்படுத்த இஷ்டப்படாமல் பேசாமல் இருந்தாள்.

காலடியில் வந்து விழுந்த அந்தக் கவரைக் குனிந்து எடுத்துப் பிரித்தவருக்கு .....

முகமெல்லாம் வியர்த்துவிட்டது.



எவ்வளவு சாமர்த்தியமாய் மனத்தை வெற்றி கண்டவரானாலும்.—அன்று வெடித்து விட்டார். ''பார்த்தியா தேவகி... நம்மை மூணும் மனுஷர்கள் மாதிரி நினைச்சண்டு சங்கர் தன்னோட கல்யாணப் பத்திரிகையை அனுப்பி இருக்கான்...''

கையிலிருக்கும் பாத்திரம் கீழே விழுந்தது தெரியாமல் திகைத்து நின்றாள் தேவகி.

''என்னது... என்ன சொன்னீங்கோ.. கல்யாணக் கடுதாசியா.... யாருக்குக் கல்யாணம்... நம்ம சங்கருக்கா... நிஜமாவா.. நம்ம கிட்ட ஒரு வார்த்தை கேட்காம... பொண்ணு யாராம்... கூட ஏதாவது கடுதாசி எழுதி வெச்சு இருக்கானா...''

''இல்லே.. ஒண்ணுமே இல்லே.. பொண்ணு பேரு நிஷான்னு போட்டு இருக்கு... அவன் ரொம்ப மாறிட்டான்... நீ மனசு கஷ்டப் பட்டுப்பேன்னு உங்கிட்ட சொல்லலே நான். ... நான் டில்லிக்குப் போயிருக்கச்சே, என்னே பார்த்து ஓடி வருவான்னு நினைச்சேன்... அவன் ஏனோ தானோன்னு வரவேற்றான்... கார், பங்களான்னு பிரமாதமா இருக்கான். ஆனாலும் ஏனோ என்னே அன்னியமா நடத்தினான்... எங்கூட உட்கார்ந்து சாப்பிடலே.. மூஞ்சி குடுத்து ரெண்டு வார்த்தை பேசலே.. உன்னைப் பத்தி கேக்கலே... காலேயில் ஆபீஸ் போனா ராத்திரி பத்து மணிக்கு வந்து நேர தன் ரூமுக்குப் போய்க் கதவைச் சாத்திப் பான்... எனக்கு என்னமோ மாதிரி ஆயிடுத்து... அங்க இருக்கவே பிடிக்கலே... ஒரு வேளை... அவனோட அந்தஸ்துக்குக் கொஞ்சமும் பொருந்தாம நான் குடுமியும், வேஷ்டியுமா இருந்ததும் ஒரு காரணமோ என்னவோ. பணம் வந்துட்டா மனுஷா இப்படியா மாறிடுவா...''

---

விபத்தில் அடிபட்டிருக்கும் நபருக்கு முதல் உதவி செய்கிறேன் என்று சிலர் சோடா வாங்கி வந்து வாயில் ஊற்றுவார்கள். எல்லோருக்கும் இது பொருந்தாது. இது சில சமயங்களில் உயிருக்கு ஆபத்தையும் விளைவிக்கலாம் என்று டாக்டர்கள் சொல்லுகிறார்கள். அடிபட்டு மயக்கநிலையில் உள்ளவர்களுக்குச் சோடாவை வாயில் ஊற்றினால் அது வயிற்றுக்குள் போகாமல் நுரையீரல்களுக்குப் போய் விடுகிறதாம். இதனால் சோடா கொடுக்காதீர்கள், ஆபத்து!

கே. ஜி. எஃப் பழனிச்சாமி.



''அவன் நாசமாப் போக.... பெத்த பிள்ளையா நினைச்சு எத்தனை பாசத்தைப் பொழிஞ்சோம்... ஒரு பைசா அவனேக் கேட்டிருப் போமா.... ஒரே நிமிஷத்தில் தூக்கி எறிஞ்சுட்டானே நம்மை.... கடன்காரன்...''

''தேவ....கி....''

''சரி சரி.... நான் அவனை வெய்யலே... நீங்க கத்தாதீங்கோ... இருமல் வந்துடப் போறது....''

டில்லியில் நடந்த சங்கரின் திருமணத்திற்கு அவர்கள் போகவில்லை. சங்கரும் கவலைப்பட்டதாய்த் தெரியவில்லை.

காலம் உருண்ட வேகத்தில் அவருடைய வியாதியும் அதிகமாகியது. .பாத்திரம், பண்டங்கள் அடகுக் கடையில் தஞ்சமடைந்தன. குடி இருந்த அந்தச் சின்ன வீட்டைத் தவிர மற்றவற்றை விற்று அவரை மருத்துவமனையில் சேர்த்தாள் தேவகி.

ஆஸ்பத்திரியின் பரபரப்புக்குக் காரணம் — புதிதாக வரப் போகும் ஒரு டாக்டர் என்பது தெரிந்தவுடன் தேவகி மௌனமானாள்.

ஆனால்...

அவர்கள் எதிர்நோக்கும் டாக்டர் ஒரு பெண், பெயர் நிஷா என்றவுடன்...

விடிய விடிய உறங்கவில்லை தேவகி. கணேசனின் கட்டிலின் கீழ் தரையில் படுத்தபடி விழித்துக் கொண்டிருந்தாள்.

அமைதியாய் கேஸ்ஷீட்டைப் படிக்கும், அந்தப் பெண்ணின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள் தேவகி.

''நிஷா... டேக் இஸ் ஈ....''

பிரமித்து நின்றுவிட்டவளை... குழிவிழுந்த கண்களால் கூர்ந்து பார்த்தனர் கணேசனும், தேவகியும்.

மூவரின் திகைத்த நிலையைக் கண்டபின் நிஷா....

''ஷங்கர்... வாட் ஹேப்பண்ட்? யூ நோ தெம்...?''

''யெஸ்.''

சட்டென்று வெளியேறியவளைக் கண்டு உடலில் ஒவ்வொரு அணுவும் துடித்தது அவர்களுக்கு.

ஏன் இப்படி மாறினான் சங்கர்?

மனைவியின் தொழில் நிமித்தம் தானும் உத்யோகத்தை மாற்றிக்கொண்டு இங்கு வந்தவுடன் அவர்கள் பணம் கேட்பார்களே என்று பயந்து ஒதுங்கினானா?....

நிஷா மருந்துகளை மாற்றி எழுதித் தந்து விட்டு நகர்ந்த பின் வெகுநேரம் ஆலோசனை செய்தார்கள் கணேசனும், தேவகியும். கண்ணெதிரில் நின்றும்.... அன்னையின் உடல் நிலையைக் கண்டும்.... அவன் மௌனமாகிப் போனதை ஜீரணிக்கவே முடியவில்லை அவர்களால்.

தேவகி.... எத்தனை வயதானாலும் பெண். தன் கண்ணீரில் மனத்தைக் கரைத்தாள். ஆனால் கணேசன்... உள்ளுக்குள் துடித்தார்.

ஒரு முடிவுக்கு வந்தார்கள் இரண்டுபேரும்.

பெரிய டாக்டரிடம் சென்று கேட்டுக் கொண்டு, அவர் நீட்டிய பாரத்தில்கையெழுத் திட்டு, தாங்கள் மருத்துவ மனையைவிட்டு டாக்டரின் அறிவுரைக்கு விரோதமாய் வெளி



# பயணச் சுவை

போட்டி: 41

கார், பஸ், ரயில், விமானம், மாடு அல்லது குதிரை வண்டி, கப்பல், படகு, ஸ்கூட்டர், சைக்கிள், ஏன் கால் நடையாகக் கூட நீங்கள் பயணம் செய்தபோது நிச்சயமாகச் சுவையான அனுபவங்கள் ஏற்பட்டிருக்கும். அவற்றுள் ஒன்றை ரத்தினச் சுருக்கமாகக் கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. உறையின் மேல் ''பயணச் சுவை'' என்று மறவாமல் குறிப்பிட வேண்டும். குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப் புடைவை பரிசு காத்திருக்கிறது.

முடிவு தேதி: 25–2–85

இன்னும் 12பட்டுப்புடவைகளே பாக்கி. இவற்றுள் ஒன்றைக் கண்டிப்பாகப் பெற்று விடும் உறுதியோடு வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறவும்.

என் பெயர் : ..............................

விலாசம் ; ..............................

..............................

பட்டுப்புடவைப் பரிசுத் திட்டம்

வேறுவதை ஒப்புக்கொண்டு வீட்டிற்கு வந்தனர். வீட்டிற்கு வந்த இரண்டாவது நாளே கணேசன் இறந்து போனார்.

ஓசை வந்த திக்கை நோக்கி உள்ளே ஓடிய இருவருக்கும் ஆச்சரியம். அன்றலர்ந்த மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை அணிந்திருந்த கணேசனின் புகைப்படம் எப்படி கீழே விழுந்திருக்கும்? கயிறு நைந்து இருக்குமோ? எப்படியோ விழுந்து நொறுங்கிய படத்தின் முன் மண்டி இட்டு அமர்ந்திருந்தார்கள் தேவகியும் சங்கரும்.

''தேவகி.... சங்கர் கேக்கற உதவிக்குச் சரின்னு சொல்லு.... அவனுக்கு உன் மேலே இருக்கிற மதிப்பை இப்பவாவது ஒத்துக்கணுமே... நெருங்கிய உறவுகள்கிட்ட பழி உணர்ச்சியைக் காட்டாதே.... உனக்கும் வாழ்க்கையில் ஒரு பிடிப்பு வேண்டாமா... நீ சரினு . ஒத்துண்டாலே அவன் தன் நிலைக்கு வெட்கிமனத்துக்குள் குமுறுவான்... சாதாரண மனுஷாளைப் போல் பழி, வெறுப்புன்ற எண்ணத்தையெல்லாம் இந்தக் கடைசி காலத்தில் மனத்தில் வளர விடாதே....''

உயிருடன் இருந்தால் இப்படித்தான் சொல்லி இருப்பார். கணேசனின் குரல் தேவகியின் காதில் ஒலிப்பது போலிருந்தது.

''உங்க மனசுக்கு நிம்மதின்னா எனக்கும் சரிதான்....''

தெளிந்து நிமிர்ந்தவளைக் கண்களில் நீர் திரையிட நோக்கினான் சங்கர்.

''மன்னி.... 'கனி'ல் சாதாரண குழந்தை இல்லை.... அவனுக்கு மூளை வளரவே இல்லை. அவன் ஒரு மெண்டலி ரிடார்டட் சைல்ட்.. அவனுடன் கூட ஒருவர் எப்பவும் கண்டிப்பா இருக்கணும்.... பாசம், ஆசைன்றது எல்லாம் எனக்குன்னு வரச்சேதான் புரியறது மன்னி... என்னை மன்னிச்சிடுங்கோ...எனக்கு கோர்வையா பேச வரலை... மன்னி...''

''சங்கர்! கனில் நிலைமை பற்றிக் கேட்க வருத்தமாகத்தான் இருக்கு. ஆனா கனியைக் கவனிக்கக்க நான் இருக்கச்சே அவனை யாரண்டை விட்டுட்டுப் போறதுன்னு நீ கவலைப்படவே வேண்டாம். பெரிய கவலை போதும். சின்னக் கவலைகளை விட்டொழி.''

''மன்னி நீங்களும் எங்ககூட வந்துடறீங்களா?...''

''அது மட்டும் முடியாதுப்பா... இது நானும் உன் அண்ணாவும் நாற்பது வருஷம் வாழ்ந்த வீடு. அவர் அடிக்கடி எனக்குபுத்தி சொல்வார், இந்த மூலையில், ஜன்னலருகில் உட்கார்ந்துண்டு. பசுமையா ஞாபகம் இருக்கு. இந்த சந்தோஷத்தை விட்டுட்டு என்னால எங்கயும் வரமுடியாது. உன் குழந்தையை இங்க கொண்டுவிடு... நான் பார்த்துக்கறேன் அவனை... எங்க இருந்தாலும் நீங்க சந்தோஷமா இருந்தா அது போறும் எங்களுக்கு...''

தேவகி மீண்டும் பாசத்தைப் பொழியத் தன்னைத் தயார்ப் படுத்திக் கொண்டாள். ஒரு வட்டம் பாசப்பிணைப்பில் பூர்த்தியாகிவிட்டது. வட்டத்துள் வட்டங்களாய் இயற்கையின் சுழற்சியை உணர்ந்து கொண்டாள் அவள்.

# “காஸ் சிலிண்டரைக் கடன் வாங்குதல் கஷ்டத்தைக் கடன் வாங்குவதாகும்:”



காஸ் சிலிண்டரைக் கடன் வாங்குதல் சட்டத்திற்குவிரோதமாகும். காரணம் காஸ் சிலிண்டர் கம்பெனிக்குச் சொந்தமாகும். அது உங்களுக்கு மட்டுமே குத்தகைக்கு (உபயோகத்துக்கு) கொடுத்துள்ளது. இரவல் வாங்கியவருக்கு ரீ:பில் செய்வதோ மெகானிக் ஸர்வீஸோ மறுக்கப்படமுடியும்.

ஆனால் முக்கியமான விபரம் என்னவென்றால், காஸ் சிலிண்டரைக் கடன் வாங்குவது ஆபத்தானதாகும். எல்லா ரெகுலேட்டர்களும் எல்லா சிலிண்டர்களுக்கும் பொருந்தாது. கடன் வாங்கிய சிலிண்டரிலிருந்து காஸ் கசிந்தால் உங்களுக்கு கஷ்டம்தான்.

பாதுகாப்பை முன்னிட்டு, சிலிண்டரை ஒருபோதும் கடன் வாங்குதலோ இரவல் வாங்குதலோ கூடாது.




**குக்கிங் காஸை உங்கள் சிறந்த நண்பனாக்கிக் கொள்ளவும்.**

பொதுமக்கள் நலனை முன்னிட்டு பாரத் பெட்ரோலியம் கார்ப்பொரேஷன் லிமிடெட்டால் வெளியிடப்பட்டுள்ளது.



# ஆம்ஸ்டர்டாமின் அழகும் வளமும்

## 16

நா. பார்த்தசாரதி

மறு நாள் அதிகாலை மிகவும் சீக்கிரமே விடிந்து விட்டது போலிருந்தது. ஐரோப்பாவில் பெரும் பாலான நகரங்களின் ஓட்டல்களில் ஒரு வசதி 'பெட் அண்ட் பிரேக்ஃபாஸ்ட்' முறை. அறை வாடகையிலேயே சேர்த்துக் காலைச் சிற்றுண்டி, காப்பியும் அடக்கம். ஆம்ஸ்டர்டாமின் ஓட்டல் 'ஆந்தை'யிலும் இந்த ஏற்பாடு இருந்தது. ஆனால் பெரும்பாலான ஓட்டல்களில் இரவு வேளைகளில் உணவு பரிமாறும் இடம் வேறாகவும் காலைச் சிற்றுண்டிக்கான இடம் வேறாகவும் இருக்கும். நீராடி உடை மாற்றிக் கொண்டு ஆம்ஸ்டர்டாம் நகரம் அளித்திருந்த புத்துணர்ச்சியோடு கீழே படியிறங்கி வரவேற்புப் பகுதியில் காலைச் சிற்றுண்டிக் கூடம் எங்கிருக்கிறது என்பதை விசாரித்தேன். குறுகலாகக் கீழே பேஸ்மெண்ட்டுக்கு இறங்கும் ஒரு சுழல் மாடிப் படியைச் சுட்டிக் காண்பித்தார் வரவேற்பாளர்.

துப்பறியும் கதைகளில் வரும் மர்ம அறைக்கான வழி போலிருக்க அந்தப் படியில் இறங்கினால் கீழே ஓர் அழகான கச்சிதமான சுத்தமான சாப்பாட்டுக் கூடம் தெரிந்தது. அமைதியாக வாடிக்கையாளர்கள் அமர்ந்து பிரேக்ஃபாஸ்ட் அருந்திக் கொண்டிருந்தார்கள். பீங்கான் தட்டுகளின் ஜலதரங்க ஒலிகள் அடங்கிய சுருதியில் ஒலித்த படியிருந்தன. காலைச் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு சுற்றிக் காண்பிக்க அழைத்துச் செல்லும் கோச்சுக்காகக் காத்திருந்தேன். ஹாலந்தைப் பற்றிய விவரங்களும் விசேடங்களும் மனத்தில் புரண்டன. பெரும்பாலும் டச்சு மக்களும் டச்சு மொழியும் வழங்கும் நாடு ஹாலந்து. 'ஃப்ரிஸியன்' என்ற மொழிபேசும் சிலரும் உள்ளனர். முதல் நாளிரவு ஃபோனில் 'புக்' செய்திருந்தபடி காலை எட்டு மணிக்கு 'கோச்' வந்து என்னை ஏற்றிக் கொண்டு சென்றது.

முதலில் இந்தோனேஷியாவுக்கும், பின்னர் 1975ல் சூரிநாமுக்கும் சுதந்திரம் வழங்கியபின் தனது காலனிகள் என்று சொல்லிக் கொள்ளப் பெரிதாக ஹாலந்து எதையும் மீதம் வைத்திருக்கவில்லை. இந்தக் காலனி நாடுகளும் போய் இவற்றிலிருந்தது திரும்பியவர்களும் வந்த பின் ஓரளவு வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரித்துள்ளது. கனரகத் தொழில்கள் வளர்ந்துள்ள போதிலும் பன்றியிறைச்சியும், பால்வளப்பண்டங்களுமே ஹாலந்தின் ஏற்றுமதியில் கணிசமானவையாயிருக்கின்றன. சதுப்பு நிலமாகிய நாட்டின் பெரும் பகுதியை ஓடைகளும், கால்வாய்களும் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றன. ஸ்விட்சர்லாந்தில் உற்பத்தியாகி ஜெர்மனி முழுவதும் பாயும் ரைன் நதி பல கிளைகளாகப் பிரிந்து முடிவில் ஹாலந்தின் ரோட்டர்டாமில் தான் கடலில் கலக்கிறது. கோதுமை, உருளைக்கிழங்கு, பீட்ரூட், காய்கறிகள், அழகிய பல வண்ணப் பூக்கள் — இவையே கால்வாய்கள், ஓடைகள் போக மீதமுள்ள — சதுப்பு நிலப் பகுதியில் விளைபவை. ஐரோப்பாவில் மிகவும் பிரசித்தமானவை ஹாலந்தின் பாலாடைக்கட்டிகள். மஞ்சள் நிற ஃபுட்பால் பந்துகளா அல்லது வெள்ளரிப்பழக் குவியலா என்று தொலைவில் பார்க்கும் போதே நம்மை மருட்டும் சீஸ் கட்டிகளை ஹாலந்தின் அல்க்மார் சீஸ் சந்தையில் குவித்துக் குவித்து விற்கிறார்கள். அல்க்மார் சீஸ் மார்க்கெட்டையும் விண்ட்மில்களையும் சுற்றிக் காண்பிப்பதற்கென்றே ஒரு தனி டூர் புரோகிராம் இருக்கிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

ஆம்ஸ்டர்டாம் நகரம் 160 கால்வாய்களையும் 1000க்கு மேற்பட்ட பாலங்களையும்

கொண்டது. அடுத்தபடி ஆம்ஸ்டர்டாமில் அதிக எண்ணிக்கையில் இருப்பவை வைரப் பட்டறைகள் (*Diamond cutting factories*). சிறிதும் பெரிதுமாக வைரப்பட்டறைகளும் காட்சிக் கூடங்கள் இணைந்த வைரவிற்பனைக் கேந்திரங்களும் உள்ளன. கோடிக்கணக்கில் பணம் புரளும் இந்தத் தொழில் ஆம்ஸ்டர்டாம் நகரைப் பொறுத்த வரை ஒரு குடிசைத் தொழிலைப் போலப் பரவலாகவும் பிரபலமாகவும் விளங்குகிறது. இதில் பெரும்பாலும் ஐரோப்பாவின் மார்வாரிகள் என்று கருதப்படும் யூதர்கள்தான் குடும்பம் குடும்பமாக ஈடுபட்டுள்ளனர். காஞ்சிபுரம் சேலம், ஆரணி பகுதிகளில் நம்மூரில் எப்படி ஒரு குடும்பம் முழுவதும் நெசவுத் தொழிலில் ஈடுபட்டுள்ளதோ அப்படியே ஆம்ஸ்டர்டாமில் பல யூதக் குடும்பங்கள் வைரப்பட்டறைத் தொழிலில் ஈடுபட்டுள்ளன. நாலு தலை முறையாக வைர வேலைப்பாட்டில் ஈடுபட்டுள்ள குடும்பம், ஐந்து தலை முறையாக இதே தொழிலில் தேர்ந்த நிறுவனம் என்றெல்லாம் தங்களைப் பற்றிய விளம்பரங்களிலேயே சொல்லிக் கொள்கிறார்கள் பல வைர வியாபாரிகள். வைரப்பட்டறை ஆட்களும், பிற யூதர்களும் உச்சந் தலையில் பல வண்ண லேஸ் வேலைப்பாடு செய்த ஒரு வகைக் குல்லாயைத் தலையோடு ஒட்டினாற் போலக் கவிழ்த்து அணிவதால் அது தலையில் 'ராக்கோடி' அணிந்தது போல் இருப்பதால் — லண்டன் வாழ் யாழ்ப்பாணத் தமிழர்கள் யூதர்களை 'ராக்கோடிக் காரர்கள்' என்று செல்லமாக அழைக்கிறார்கள்.

அநேகமாக ஒவ்வொரு டூர் புரோகிராமும் ஒரு வைரப்பட்டறையைச் சுற்றிக் காண்பிப்பதோடு முடிகிற மாதிரித்தான் அமைக்கப்பட்டிருந்தது. அவ்வாறு அமைந்ததன் மர்மம் என்ன என்பது கடைசியாக ஒரு வைரப்பட்டறைக்குள் நுழைந்தபோது தான் தெரிந்தது. அதை அப்புறமாகச் சொல்கிறேன். இப்போதைக்கு சஸ்பென்ஸ். யாரிடமும் 'மூச்சு' விடாதீர்கள். ஜாக்கிரதை!

# ஏழு நாடுகளில் எட்டு வாரங்கள்

இப்படிக் கோச்சில் சாலைப் பயணம் செய்யாமல் கால்வாய்களிலேயே படகு மூலமாக ஆம்ஸ்டர்டாமையும் சுற்றுப் புறங்களையும் பார்க்க வசதியான பயண ஏற்பாடுகளும் உள்ளன. இதற்கென்று பிரத்யேகமாக ஞாயிறு காலைப் பயணம் இருக்கிறது. படகுகளின் தெளிவான கண்ணாடிப் பலகணிகளின் மூலம் இருபுறமும் தெளிவாகப் பார்க்கவும் புகைப்படங்கள் எடுக்கவும் கூட வசதி செய்யப்பட்டுள்ளன. இரவில் விளக்கொளியில் ஆம்ஸ்டர்டாமைச் சுற்றிப் பார்ப்பதற்கு ஒரு தனியான டூர் புரோகிராம் இருக்கிறது. இது புராதன நகரின் பகுதிகளை அதிகம் சுற்றிக் காட்டுகிறவகையிலது. ஹாலந்தும், பெல்ஜியம் போலவே முடியாட்சியின் மேலாண்மைக்குட்பட்ட பாராளுமன்ற ஜனநாயக ஆட்சி முறை உள்ள நாடுதான். பொதுவாக டச்சு ஆர்ட்அண்ட் கிராஃப்ட் சென்டர், டாம் சதுக்கம், அரண்மனை, யூதர்கள் பகுதி, 'சினகாக், ஒலிம்பிக் ஸ்டேடியம் மியூஸியங்கள், ஆம்ஸ்டர் ஆற்றின் கரையிலுள்ள ஒரு பூதாகாரமான விண்ட் மில் — இவைகளைக் காண்பித்துவிட்டு 'ஆன்



ஹாலந்து மக்கள் - பாரம்பரிய உடையில்

ஃப்ராங்க் ஹவுஸ்' என்ற ஒரு வைரப்பட்டறையைக் காண்பதுடன் டூர் முடியும்.

நகருக்கு வெளியே டியூலிப் பூக்கள் பூக்கிற பருவ காலங்களில் அப்படிப்பூங்காக்களையும் கியூக்கன்ஹாஃப் மரக்கூட்டப் பகுதியையும் சுற்றிக் காண்பிக்க ஒரு டூர் ஏற்பாடு இருக்கிறது. இங்கே கண்ணாடி அறைகளிலும், தரைப் பகுதியிலுமாகப் பல நிற இரத்தினக் கம்பளங்களை விரித்தது போல் பூக்களின் எழிற் பரப்பு வண்ணக் களஞ்சியமாக ஜொலிக்கும். 700க்கு மேற்பட்ட வகைப் பூக்கள் இங்கு உள்ளன. ஏரிகளும், பசுநிலப் புல்வெளிகளும், கால்வாய்களும் சூழ அமைந்த இந்தப் பூம்படுகைப் பகுதி கண்கொள்ளாக் காட்சி. தரையில் எழுதப்பட்ட தனித்தனிக் கவிதைகள். இயற்கை வாரி இறைத்த வண்ண விநோதங்கள்.

அடுத்தது 'விண்ட் மில்' எனப்படும் காற்றாடி எந்திரங்கள். ஒரு நூற்றாண்டுக்கு முன்பு வரை முழு ஹாலந்திலுமாகச் சேர்த்து மொத்தம் ஒன்பதாயிரம் 'விண்ட் மில்கள்' இருந்தனவாம். இப்போது அவற்றில் 700 மட்டுமே எஞ்சியுள்ளன. மின்சாரம் முதலிய நவீன வசதிகள் வருவதற்கு முன் இத்தகைய பிரும்மாண்டமான காற்றாடி எந்திரங்களின் மூலமே பல காரியங்கள் சாதிக்கப்பட்டனவாம். தண்ணீரைப் 'பம்ப்' செய்து இறைப்பதற்கும், மேலேற்றுவதற்கும்மரங்களை வேண்டிய அளவில் அறுத்துப் ' பலகை செய்வதற்கும், பல்வேறு தானியங்களை உமி பிரிக்க, மாவாக அரைக்க என்றும் இப்படிப்பட்டவற்றை இந்தப் பெரிய 'விண்ட் மில்கள்' மூலமாகவே ஹாலந்து மக்கள் கடந்த காலத்தில் சாதித்திருக்கிறார்கள். வடகடற்காற்றின் வேகமும் இதற்கு உதவியிருக்கிறது. இன்றும் கிராமப்புறங்களில் சில காற்று எந்திரங்கள் அப்படி உபயோகத்திலிருக்கலாம். பெரும்பாலான நகர்ப்புற 'விண்ட் மில்கள்' இன்று புராதனக் காட்சிப் பொருள்களாகி விட்டன. இப்போது ஹாலந்தை ஞாபகப்படுத்தும் அடையாளமே 'விண்ட் மில்' ஆகிவிட்டது.

இரண்டாம் உலகப் போரின் போது நாஜி ஆதிக்கக் கொடுமைகளுக்கு ஆளான 'ஆன் ஃப்ராங்க்' என்ற யூதப்பெண்மணியின் வீடு இன்றும் ஆம்ஸ்டர்டாமில் ஒரு முக்கிய இடமாக விளங்குகிறது. இதை யூத மக்களின் டிரஸ்ட் ஒன்று இன்று நிர்வாகம் செய்து இயக்கி வருகிறது. இதில் ஒரு தலைமுறையின் சோக வரலாறும், ஒரு யூதக் குடும்பத்தின் பரிதாபக் கதையுமே அடங்கி இருக்கிறது. நாஜிகளின் ஆதிக்கத்தில் யூதர்கள் பட்ட பாட்டைப் பற்றி எல்லாம் இந்த வீடு கதை கதையாகச் சொல்கிறது. ஆம்ஸ்டர்டாம் அளித்த ஆனந்தங்கள் எல்லாம் இந்த ஆன் ஃப்ராங்க் ஹவுஸில் நுழைந்ததும் மறைந்து போய்ச் சோகம் கப்பிவிடத் தவித்துப் போகிறோம் நாம். மறுபடி இந்தச் சோகத்திலிருந்து நம்மை மீட்டுப் பிரமிப்புக்கு ஆளாக்கிவிடுகிறது ஆம்ஸ்டர்டாமில் பல தலைமுறையாக இயங்கி வரும் ஒரு யூத குடும்பத்திற்குரிய புகழ் பெற்ற வைரப்பட்டறை. இந்தப் பரிதாபத்தையும் அந்தப் பிரமிப்பையும் அடுத்த வாரம் விளக்கமாகச் சொல்கிறேன்.

(தொடரும்)

## அருள்வாக்கு

ஸமீப காலமாக நம் ஆசாரங்களைப் பற்றி இதற்கு முந்தைய தலைமுறைக்கு இருந்ததைவிட கொஞ்சம் கௌரவ புத்தி உண்டாயிருப்பதைப் பார்க்கிறேன். முன்னே இங்கிலீஷ் படித்தவர்களென்றால் நம் ஆசாரம் அவ்வளவுமே பேத்தல் என்று நினைப்பவர்களாயிருந்தார்கள். ஆனால் நான் கொஞ்ச நாளாக ஒரு வேடிக்கை பார்க்கிறேன் — ஸயன்ஸு¬ம், ஸ்பிரிசுவாலிடியும் (ஆத்மீகமும்) ஒன்றுக்கொன்று விரோதமானது போல் தோன்றினாலும் ஸயன்ஸ் அபிவிருத்தியாகிக் கொண்டு வருவதாலேயே புதிது புதிதாக டிஸ்கவரி செய்யும்போது 'இதென்னடா ஆச்சர்யமாயிருக்கிறது! நாம் ரொம்பவும் அறிவிலே பின் தள்ளி நின்றவர்கள் என்று நினைத்த ஆதிகால இந்தியர்கள் இந்த விஞ்ஞான உண்மைகளை நமக்கு இருக்கிற லாபரட்டரியும் இன்ஸ்ட்ருமென்ட்களும் இல்லாமலே எப்படியோ கண்டு



பிடித்து அவர்களுடைய சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறதாகத் தெரிகிறதே!' என்று அதிசயப்படுகிறார்கள். கொஞ்ச நாள் முந்தி (பத்திரிகைகளில்)பார்த்திருப்பீர்கள்.ரஷ்யாக்காரன் கம்யூனிஸ்ட் நிரீசுவரவாதி. ஆனால் இங்கே நாம், ''இதென்ன ஹோமம்வீட்டையெல்லாம் புகையாக்கிக் கொண்டு, கண்ணும் கரிக்கக் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது'' என்றால் ரஷ்யாதேசஸயன்டிஸ்ட்கள்வறட்டிப் புகையினால் அடாமிக் ரேடியேஷன் (அணுச் சிதைவின் கதிரியக்கம்) உள்படப் பலவித பொல்யூஷன்களைப் போக்கிக் கொண்டு விடலாமென்று சொல்லி, நம்முடைய ஹோமத்தைப் புகழ்ந்திருக்கிறார்கள். இதேபோல ஹோமத்தில் போடப்படும் பலவிதமான ஸமித்துக்களின் புகை பரவுவதும் கிருமிநாசினியாக (antiseptic) உதவுகிறது என்று முன்னே டாக்டர்கள் சொன்னதுண்டு. தர்ப்பை, துளசி, பில்வம் என்றிப்படி நம் சாஸ்திர காரியம், பூஜை இவற்றில் பிரயோஜனமாகின்றவற்றுக்கெல்லாம் வைத்திய ரீதியிலோ, மற்ற ஸயன்ஸ்களின் ரீதியிலோ Sound basis (அழுத்தமான அடிப்படை) இருக்கிறது என்கிறார்கள்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்

# Prompt after-sales service —cuts down-tool time.



# Wolf

## That's value added to reliability.



In the field for decades, Wolf has the age, the experience, and the understanding of power tool users' needs. We know that your industrial development and growing production needs call for more efficient servicing of your power tools. Our nationwide service network is organised to provide preventive, regular and breakdown maintenance services within easy reach—and to render them promptly.




Manufactured by Ralliwolf Limited.
Marketed by Rallis India Limited.
Bombay • Calcutta • Delhi • Madras






## பிழைகள் மலிந்த பாட நூல்கள்

சென்ற ஆண்டு வெளியான எட்டாம் வகுப்புக்குரிய அறிவியல், ஆங்கில பாடப் புத்தகங்களில் ஒரே பிழைகள் மயம். அறிவியலில் அடிப்படைத் தவறு. ஆங்கிலத்தில் இலக்கண, எழுத்துப் பிழைகள். இத்தனைக்கு இப்பாடப் புத்தகங்களை அரசு வெளியிடுகிறது. துளிக்கூட பொறுப்புணர்ச்சியில்லாத செயல்,

**வி. குமாரவேல், தச்சநல்லூர்.**

## இருந்தும் இல்லாதவர்

120—க்கு மேல் ஐ.கியூ. பி.எச்.டி. பட்டம், பன்மொழிப் புலமை, விரிவான நூல் அறிவு—இத்தனையும் இருந்தும், திறமைக்கேற்ற, திருப்தியளிக்கும் வகையில் இடம், பொருள், பதவி அமையவில்லை. காரணம் — பார்வர்ட் கம்யூனிடியில் பிறந்துவிட்டதால்.

**டாக்டர் ஸி.வி. பிச்சப்பா, சென்னை—4.**

## நாகரீக மோகம்

மேல் நாட்டவர் அவர்கள் நாட்டின் தட்ப, வெட்பநிலை காரணமாகக் காலுறையும், காலணியும் அணிகிறார்கள். அவர்களைப் பார்த்து நாமும் நம் பள்ளிக் குழந்தைகளை ஸாக்ஸூம், ஷூஸூம் அணியச் சொல்லிக் கட்டாயப்படுத்துதல் அபத்தம். வியர்த்துப் போன ஈரக்கால்களுடன் நாள் முழுதும் குழந்தைகள் கஷ்டப்படுவதைக் காணச் சகிக்கவில்லை.

**விஜயா தியாகராஜன், கும்பகோணம்—1**

## முக்கியமான முதல் பொருத்தம்

திருமணத்துக்கு முன், நட்சத்திரம், கோத்திரம், ஜாதகம் என்று பல பொருத்தங்களைத் துருவித் துருவி ஆராயும் நமது சமூகம், மணமக்கள் எதிர்காலத்தில் நல்ல சந்ததிகளை உருவாக்க வேண்டும் என்ற தீர்க்கதரிசனத்துடன் அவர்களுடைய ரத்த க்ரூப்களை ஆராய்வதில்லையே!

**ஆர். ராஜம், தென்பாதி.**

## அநியாயம் இது

வேலையில்லாத் திண்டாட்டம் மலிந்துள்ள இந்நாட்களில் வேலை கிடைத்த பல இளைஞர்கள் அலுவலக நேரத்தை அரட்டை அடித்து வீணடிக்கிறார்களே, அவர்களுடைய வேலையைப் பிற மனச்சாட்சியுடைய வேலையில்லாப் பட்டதாரிகளுக்குக் கொடுத்தாலும் பயனுண்டு.

**லின்ஸி, சென்னை—1.**

## பெண்ணென்று பூரிக்கும் காலம்

என் இரண்டாவது குழந்தையும் பெண்ணாகப் பிறந்தபோது 'ஐயையோ! மீண்டும் பெண்ணா?' என்று அங்கலாய்த்தனர் உற்றார் உறவினர். இந்நிலை மாறி 'ஹையா! மீண்டும் பெண்' என்று பூரிக்கும் காலம் வராதா?

**ஜி. சபிதா, புதுடெல்லி—64.**

## தைரியமில்லை!

வானொலி ஒலிபரப்பும் கு.க. விளம்பரங்களில் தோன்றும் லூப் அணியும், கருத்தடை





# என் மனக்குறை

வாசகர் பங்கு

...த்திரைகள் சாப்பிடும் பெண்கள் ஏன் ...போதும் சுசீலாக்களாகவும், கல்யாணி ...ாகவும் இருக்க வேண்டும்? ஒரு ஜமீலா ...கவோ, மேரியாகவோ இருந்தால் ...னை?

...ஜி. சத்யகிரிராஜன், திருப்பராய்த்துறை.

## ...வர்களை அசைக்க முடியாது

1980—ல் எனக்கு இருபது அம்சத் திட்டத் ...கீழ் மணலி டவுன்ஷிப்பில் வீட்டு வசதி ...ரிய வீடு ஒதுக்கப்பட்டது. இதன் கட்டு ...னப் பணியை மேற்பார்வையிட்டது ...எம்.டி.ஏ. வீட்டின் அடித்தளத்தில் ...ிசல் கண்டுள்ளது என்று கடந்த நான்கு ...டங்களாகப் பல முறை கடிதம் எழுதியும், ...ரில் சென்று கூறியும் உள்ளேன். இதுநான் ...ர பதில் கூட கிடைக்கவில்லை. என் பிரச் ...யும் தீரவில்லை.

எஸ். ஆர். கோபால், சென்னை—103.

## ...லங்கைச் சகோதரர்களின் துயர்

...வெளியே போனால் உயிரோடு திரும்பு ...ாமா? என்ற ஐயத்துடனும், பயத்துடனும் ...ழும் இலங்கைத் தமிழர் துயர் தீர்ந்து, ...ந்தத் தீவில் அமைதி நிலவாதா? மனிதனை ...ிதனாக மதிக்கும் நிலை என்று பிறக்கும்?

கே. கே. பலராம், மதுரை—9.

## ...ய்தவன் சிரிக்க...

...டைப்பாதை கடைபாதியாகி
...டப்பவர்கள் கூட்டத்தில் மோதி
...ிந்து, சைக்கிள் பாதையே கதியான
தால்,
சைக்கிள்கள் வழிதேடி வெளியே பாய
சட்டத்தை மீறி கோட்டைத் தாண்டிய
தாய்ச்
சட்டையைப் பிடித்திழுத்தது காவலர்கை
எய்தவன் சிரிக்க அம்பை நோவது ஏன்?
ஆய்ந்து காரணத்தைக் களையாது
விடுவதும் ஏன்?

எஸ். ஆனந்த், சென்னை—1.

## இயற்கையின் அருமை

[illegible] நகையில் பிறந்து வளர்ந்தவள் நான். பல வருடங்கள் கழித்துச் சமீபத்தில் அங்கே போன போது அடைந்த துயரத்துக்கும் அதிர்ச்சிக்கும் அளவே இல்லை. என் இளமைப் பருவத்தில் என் கண்ணெதிரில் கனிந்த அந்த அழகிய மலைப் பெண் இன்று பலவிதங்களிலும் கோரப் படுத்தப்பட்டுவிட்டாள். இயற்கை அழகுகளையெல்லாம் அழித்துக் கட்டிடங்களைக் கட்டியுள்ளார்கள். திரும்பிய இடங்களிலெல்லாம் அசுத்தம் வேறு.

எம். உஷா, பெங்களூர்—11.

## தண்ணீரில்லாக் காடுகள்

வறட்சி இல்லாத நாட்களில் கூட நம் மக்கள் தண்ணீருக்காக அவதிப்படுவதைப் பார்த்தால் அடிப்படைத் தேவையைக் கூடப் பூர்த்தி செய்ய இயலாத அரசின் கையாலாகாத்தனத்தையும், இதைப்பற்றித் தார்மீகக் கோபம் அடைவதைத் தவிர வேறெதுவும் செய்ய முடியாத என்னுடைய சொந்த நிலைமையையும் எண்ணி வெறுத்துப் போகிறேன்.

ஜி. சித்ரா, சென்னை—11.





## கண்ணைப் போற்ற வேண்டாமா?

எல்லாவிதமான கலைஞர்களையும் அரசும் சரி, தனியாரும் சரி, கௌரவித்துப் பட்டம், பரிசு தருகிறார்கள். புகைப்படக் கலைஞர்கள் மட்டும் என்ன பாவம் செய்தார்களோ தெரியவில்லை. என்னுடைய நாற்பத்தைந்து ஆண்டு அனுபவத்தில் ஒரு புகைப்படக் கலைஞரேனும் கௌரவிக்கப்பட்டதாக அறியேன்.

**என். ராமகிருஷ்ணா, மாயூரம்—1.**

## மத்தளத்திற்கு இரண்டு பக்கமும் இடி

நான் பீஹாரில் வசிக்கிறேன். இங்குள்ளவர்கள் எங்களை 'மதராஸி' என்று இளக்காரத்துடன் அழைக்கிறார்கள், ஏளனமாய் நடத்துகிறார்கள். தெற்கே வந்தாலோ, நீ பிராமணன். 'வடக்கே இருந்து வந்த ஆரியன்' என்று கரிக்கிறார்கள். என்னதான் செய்வது?

**வி. பாலகிருஷ்ணன், கிரிதி, பீஹார்.**

## படிப்பிருந்தும் பயனில்லை

'பி.யூ.சி.யில் கணக்கு பேப்பரில் 100%, பி. எஸ்.ஸியில் 85%, எம்.எஸ். ஸியில் 70% என்று மதிப்பெண்கள் எடுத்து 1981—இல் தேறிய போதிலும் இன்று வரை வேலை கிடைக்கவில்லை. எத்தனையோ நுழைவுத் தேர்வுகளை, நேர்முகப் பேட்டிகளைக் கண்டு விட்டேன். எல்லோரும் வேலை தர ஆயிரக் கணக்கில் கேட்கிறார்கள்!

**ஒ. மங்கையர்க்கரசி, நாகர் கோயில்—1.**

## மாட்டிக் கொண்ட மத்தியதரம்

நிறைய பணம் பண்ணும் மருத்துவர்களும் வழக்கறிஞர்களும் வருமானத்தைக் குறைத்துக் காட்டி மிக எளிதாக வரி கட்டாமல் தப்பித்துவிடுகிறார்கள். மாதச் சம்பளம் பெறுகிற என் போன்ற மத்திய தர வகுப்பினன்தான் வகையாக மாட்டிக் கொள்கிறேன்.

**டி. குமரகுரு, சென்னை—111.**

## உயிரினும் உயிராய்

பொழுதுபோக்குச் சாதனமான சினிமாவை உயிரினும் மேலாகப் போற்றி, தாங்கள் பிறந்ததும், வாழ்ந்ததும், வளர்ந்ததும் அதற்காகவே என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் பெரும்பாலான மக்கள்! நடிகர்கள்தான் இவர்கள் கண்ணுக்குத் தெய்வமாகத் தெரிகிறார்கள்!

**— டி. எம். இஸ்மாயில், கோவை—2.**

## கனியும், கிழங்கும், தானியங்களும்...

அளவற்ற இயற்கை வளங்களும், உழைக்க பல கோடி கரங்களும் இருந்தும் கூட நம் நாட்டில் ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்களின் சுயநலத்தாலும் திறமைக் குறைவாலும் சுபிட்சமில்லாமல், வறுமை தாண்டவமாடுகிறது.

**வி. பிச்சை, மாம்பலப்பட்டு.**

## கல் நெஞ்சம் படைத்த குமாஸ்தா

விதவைக்கான பென்ஷன் கிடைக்க இரண்டு வருஷங்கள் அலையாய் அலைந்து, அதற்கான ஆணை பிறப்பிக்கப்பட்டதும் ஒரு வருடப் பணத்தைத் தனக்குத் தந்தால் மாதம் தவறாமல் ஒழுங்காகப் பென்ஷனை அனுப்பி வைப்பதாகச் சொன்னார் குமாஸ்தாப் பொறுப்பில் இருந்தவர். சாமி வரம் கொடுத்தும் பூசாரி வரங்கொடாத கதை இது.

**எஸ். மாலதி, பெங்களூர்—70.**

## நாடகத்திலுமா?

சமீபத்தில் பம்பாயின் பிரசித்தி பெற்ற அரங்கம் ஒன்றில் தமிழ் நாடகம் ஒன்றைப் பார்த்தேன். வெட்கக் கேடு! சினிமாவிலிருக்கும் கொச்சை, பச்சை வசனங்களை அப்படியே நாடகத்திலும் சேர்த்து விட்டார்கள். பழம் பெருமையுடைய தமிழ் நாடகக் கலைக்கே இத்தகையவர்களால் இழுக்கு உண்டாகிறது.

**விசாலம் மணி, பம்பாய்—86.**

## கண் துடைப்பு

வங்கி வேலைக்காக நடத்தும் 'இண்டர்வியூ' என்ற கண் துடைப்புத்தான் என் மிகப் பெரிய மனக்குறை. ஐந்து பெண்கள் உள்ள எங்கள் வீட்டில் ஒவ்வொரு நேர்முகத் தேர்வுக்குப் பின்னரும் வேலை கிடைக்குமா என்று ஆவலுடன் காத்துக் கிடக்கும் எங்களைப் பார்த்துக் கெக்கலித்துக் கொண்டு போவார்கள் சிபாரிசால் வேலை பெற்றவர்கள். இண்டர்வியூவில் கேட்கப்படும் கேள்விகளோ அபத்தக் களஞ்சியம்.

**திருமதி பாக்கியம் சங்கரன், ஒத்தார்.**

## பழையனவற்றைப் பேணுங்கள்

சரித்திரச் சிறப்பு வாய்ந்த தஞ்சை நகரில் ஆங்காங்கே மிச்சம் மீதியிருந்த கோட்டைச் சுவர்களையும் சமீபத்தில் இடித்துத் தரை மட்டமாக்கிவிட்டார்கள். ராஜராஜ சோழன் முடி சூடிய ஆயிரமாவது ஆண்டுவிழாவின் போது இந்தச் சரித்திரச் சின்னங்களையும்

சற்றுக் கவனித்திருக்கலாமே? மைசூர் அரண்மனையைக் காட்சியசமாக்கியுள்ளது போல் தஞ்சை அரண்மனையை அமைக்கலாமே.

டி. எஸ். ரஞ்சினி, தஞ்சாவூர்—9.

**செய்வாரா மு.க.?**

கலைஞர் மு. க. இலக்கியப் பணிக்கு இன்னும் நிறைய நேரம் ஒதுக்கி, அவருடைய மென் குளிர் நடையால், மனங்கவர் உவமைகளால், வேல் வீச்சுக் கருத்துக்களால் தமிழுக்கு வளம் சேர்க்க வேண்டும்.

மூ. ரமேஷ்குமார், போடி நாயக்கனூர்.

**தாத்தாவின் பலவீனம்**

என் கணவர் வேலையிலிருந்து ஓய்வு பெற்று இரண்டு வருடங்கள் ஆகின்றன. 12 வயதுக்கும் உட்பட்ட எட்டு பேரன் பேத்திகள் எங்களுக்கு. ஒவ்வொரு நாளும் என் கணவர் ஆறு முறை சிகரெட் புகைக்க வெளியே போகிறார். தாத்தாவைக் காணவிட்டால் பேரக் குழந்தைகளெல்லாம் ''மறைந்து கொண்டு சிகரெட் பிடிக்கப் போயிருப்பார்'' என்று கேலி செய்கின்றன.

எஸ். வி. லக்ஷ்மி, கொரட்டி.

**எழுத்தறிவித்தவன்...**

தொழில் நுட்பக் கல்லூரியில் பயின்று கொண்டிருந்த போது ஆசிரியர் ஒருவர் தவறான ஆங்கிலத்தில் விளக்கமளித்து எழுதிக் கொள்ளச் சொன்னார். இலக்கணப் பிழையைச் சுட்டிக் காட்டி ஆங்கில மொழியில் அவ்விதமான வாக்கிய அமைப்பு சாத்தியமில்லை என்று நான் கூறியது அவருக்குத் துளிக்கூடப் பிடிக்கவில்லை. அதற்குப் பிறகு என் மீது பொய்க் குற்றங்கள் புனைந்துரைத்து எனக்கு பெரும் அவப்பெயர் ஏற்படுத்திவிட்டார்.

வெ. ஸ்ரீநிவாஸன், சென்னை—40.

**தஞ்சை நகராட்சியின் கவனத்துக்கு**

எங்கள் ஊர் தொழு நோயாளிகள் இன்று வரை கழிப்பிடங்களில் உள்ள குழாய்களிலிருந்துதான் குடிநீர் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். தொழு நோயாளிகளுக்கென்று தனிக் குழாய்களை அமைக்க ரூ. 600/—க்குக் குழாயகள் வாங்கிக் கொடுத்தும் தஞ்சை நகராட்சி இன்னும் அதைப் பொருத்தித் தரவில்லை.

கே. ஏ. நடராசன், கீழ அலங்கம்.

**அவலம், அவமானம்.**

மனநிலை சரியில்லாமல் வீதியில் அலைந்து கொண்டிருந்த பெண்ணைத் தாயாக்கிவிட்டார்கள். அவள் தன் நிலை புரியாமல் இருப்பதைக் காணும் போது நாங்கள் படும் வேதனையைச் சொல்லி முடியாது. இப்படிப்பட்ட கீழ்த்தரமான மனிதர்கள் உள்ள சமுதாயத்தில் நாம் வாழ்கிறோம் என்று எண்ணவே அவமானமாய் இருக்கிறது.

எம். ஆர். நசீமா, பெருந்துறை.

**நேரத்தை மதியாதார்**

சிறு வயதில் சாரணியர் படையிலிருந்த போதும் சரி, இப்போதும் சரி எந்த நிகழ்ச்சிக்கும் தலைமை தாங்க வரும் 'பெரிய' மனிதர்கள் உரிய நேரத்துக்கு வந்ததேயில்லை. இதனால் எவ்வளவு பேருக்கு எவ்வளவு நேரம் வீணாகிறது!

நா. விஜயசித்ரா, சென்னை-15

**ராகமாலிகா வழங்கும் பட்டுப்புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:**

ஜி. சபிதா,
D.A. 89—A, (D D A LIG ஃபிளாட்ஸ்,)
ஹரி நகர்,
புதுடெல்லி—110 064.

பெண்ணின் தந்தை: பத்தாயிரம் ரூபாய் வரதட்சிணைக்கு மாப்பிள்ளை சர்சார்ஜ் ஆயிரம் தனியாக் கேட்கிறார் அப்படிங்கறீங்களே. இது என்ன புதுசா இருக்கு?
கல்யாணத் தரகர்: மாப்பிள்ளை வருமானவரி ஆபீஸில் வேலை பார்க்கிறார். வரதட்சிணை அப்படியே அப்பாசைக்குப் போயிடும். சர்சார்ஜ் பிள்ளையாண்டான் கைச்செலவுக்கு!

—கே. ஆர். எம்.



# ஆகாச கங்கை

## 5

அறையின் நிசப்தமே ஒரு பயங்கர ஒலியாகி அரவிந்தனுடைய காதில் அறைந்தது.

தாரக்ராம் என்ன சொல்லுகிறார்? மாயா அவருடைய பெண்! கம்பெனி சேர்மனுடைய பெண்! அவளை அவனுக்குத் தான் கொடுக்க வேண்டும் என்று அவனுடைய அம்மா ஸ்விட்சர்லாந்தில் மரணப் படுக்கையில்



கண்ணீர் உகுத்து இறைஞ்சினாளாம். அவருடைய உயிர் நண்பர் – அவனுடைய தந்தை மாயாதான் தமக்கு இரண்டாவது மருமகளாக வரவேண்டும் என்று ஆசைப்பட்டாராம்!

அரவிந்தனுக்குச் சிரிப்புத்தான் வர வேண்டும். வரவில்லை. உள்ளூற அழுது பார்த்தான். ஏதோ ஒரு பழங்கால சினிமாவில் யாரோ ஒருத்தி சாகுந்தறுவாயில் தன் பெண்ணை யாரோ ஒரு பிள்ளையின் கையில் ஒப்படைக்கும் காட்சி கண்முன் தோன்றியது. என்ன சினிமா? யார் நடித்தார்கள்? சினிமாவை மறக்க முயன்றபோது சமீபத்தில், சில ஆண்டுகளுக்கு முன் காலமான அம்மா கண்முன் நின்றாள்.

இருவரும் – தாயும், பிள்ளையும் என்னென்னவோ பேசியிருக்கிறார்கள். மூத்த பிள்ளை ரகு இப்படி மேனாட்டுப் பெண் ஒருத்தியைக் கலியாணம் செய்துகொண்டு விட்டானே என்று அம்மா ருக்மணி புலம்பியிருக்கிறாளே தவிர, அரவிந்தனை மாயாவுடன் இணைத்துப் பேசியதில்லை.

அவனுடைய பிள்ளைக்கு.குடும்ப நண்பர் தாரக்ராம் என்பவர் கல்விக்கான செலவை, நட்பின் சின்னமாக ஏற்று, அவன் படிப்பை முடித்ததும் பரிசாக ஒரு வேலையையும் கொடுத்திருக்கிறார். குடும்பம் தாரக்ராமுக்குக் கடமைப்பட்டிருக்கிறது. நன்றி காட்டுகிறது.

விஷயம் இவ்வளவுதான்.

ஆனால் தாரக்ராம் ஒரு படி – ஒரு படி என்ன, நூற்றுக்கணக்கான படிகள் மேலே போகிறார்!

தாரக்ராமை அரவிந்தன் பார்த்தான். அவர் வேறு திசையைப் பார்த்தவராய், கண்ணாடித் தம்ளரில் மதுவை ஊற்றி, அதில் சோடாவைக் கலந்து கொண்டிருந்தார்.

அரவிந்தன் இருக்கையை விட்டு எழுந்தான். உடனேயே ஓடிவிடலாமா என்ற வெறி அவனுள் பிறந்தது.

''எனக்கு வயசாயிட்டே வர்றது. அந்து.. கம்பெனி இப்ப ஒரு பெரிய ஆல விருட்சமா வளர்ந்துட்டுது... முப்பத்தஞ்சு வருஷத்துக்கு முன்னே ரங்கனும், நானும் ஒரே ரயில்லே ஏறினோம்... கம்பெனி முதலாளி- ஹென்றி உட்மன்னு பேரு – எங்க ரெண்டு பேரையுமே எடுத்துண்டான்... ஆனா அவனுக்குச் சொந்த ஊரிலே ஏதோ பிராப்ளம்... ஒரு மார்வாடிக்கு, கெடைச்ச பணத்துக்கு வித்துப்புட்டுப் போய்ச் சேர்ந்தான்... அப்புறம் அந்த மார்வாடி... சரி சரி, நான் ஏன் மறுபடியும் பழசுக்கே திரும்பறேன்? என் கம்பெனி எப்படி வளர்ந்திருக்குன்னு ச்சொன்னேன். ஜயண்ட் பேன்

யன் ட்ரீ. இதிலே இப்ப நீ ஒரு சின்ன, ரொம்பச் சின்ன விழுது...''

தாரக்ராம் நிறுத்தினார்.

கும்ளரை உதட்டுக்குக் கொண்டு போய் லேசாக முத்தமிட்டார். பிறகு ஒரு சின்ன உறிஞ்சல்.

''நான் போயிட்டாலும் கம்பெனி நடக்கும்... ஆனா அது எப்படி நடக்கும்னுதான் என்னாலே கற்பனை பண்ணிப் பார்க்க முடியலே... என் லட்சியப்படி நடக்கணும்னு, என் லட்சியம் என்னன்னு தெரிஞ்சவனை நான் இப்பவே தயார் பண்ணணும்... கடவுள் எனக்கு ஒரு புள்ளையைக் கொடுக்கலே... அண்ணா, தம்பின்னு யாரையும் கூட அனுப்பலே... ஆனா என்ன...! ஒரு பிராண சிநேகிதனைத் தந்தான்... அவனுக்கு... அவனுக்கு...''

''ஜஸ்ட் எ மினிட், அந்து!'' சொன்ன அவர், ட்ரெஸ்ஸிங் டேபிளுக்குப் போனார். சிறு உறை ஒன்றை எடுத்தார்.

''இதப் பார்... இப்பவே பார்க்கணும்னு இல்லே... வீட்லே போய்ப் பார்த்துக் கொள்... எ ல் லா ம் மாயாவோட போட்டோ... ஒத்த நாடி... சிகப்பு... சிரிக்கிறப்ப தாடையிலே குழிவிழும். என் பெண்ணைப் பத்தி நானே சொல்றது நாகரீகம் இல்லே... நீதான் நேர்லேயே வரப்போறியே...''

''நான் இப்பப் பேசலாமா, சார்?''

''என் சார் போடறே அந்து? முன்னே கூப்பிடுவியே, அதுமாதிரிக் கூப்பிடு...''

தாரக்ராம் சிரித்தார்.

சிரிப்பில் உயிர் இல்லை என்பதை அரவிந்தன் உணர்ந்தான்.

''என்னை நீங்க ரொம்ப இக்கட்டான நிலையில் நிறுத்தியிருக்கீங்க சார்... நான் இப்பக் கல்யாணம் பண்ணிக்கிறதா இல்லை...''

''யூ மீன் இட்?... யூ மீன் இட்? அந்து! நீ... நீ என்னை விறகுக்கட்டையாலே...



பி.வி.ஆர்.

விறகுக் கட்டையாலே இப்ப அடிக்கறே... நோ... நோ... நீ ரங்கன் புள்ளை... நீ அடிக்க மாட்டே... உனக்குள்ளே ஏதோ ஒரு அசுரன் பூந்துண்டு என்னை அடிக்கறான்...''

''மன்னிக்கணும் சார்... மாயாவும் நானும் சின்ன வயசிலே விளையாடினதெல்லாம் எதிர்கால வாழ்க்கைப் போராட்டத்துக்கு அஸ்திவாரமா இருக்க முடியாது... கோமளி மாமியோ என் அப்பாவோ ஆசைப் பட்டிருக்கலாம்... அவங்க ஆசை அவங்களோட சுயநலத்தாலே அல்லது அன்பாலே ஏற்பட்ட ஆசை... அதை நிறைவேத்த நீங்க பாடுபடறது உங்க நல்ல குணத்தைக் காட்டறது... ஆனா நானும் உங்களோடு சேர்ந்து அதை நிறைவேத்தணும்ங்கற மாரல் ரெஸ்பான்ஸிபிலிட்டி எனக்கு இல்லை சார்...''

தாரக்ராம் இடிந்து போய் உட்கார்ந்துவிடவில்லை. ஒரு பெரிய நிறுவனத்தையே ஆட்டி வைக்கிறவர் அவ்வளவு எளிதில் ஆடிப் போய் விடுவாரா?

''எனக்குப் புரியறது அந்து. ஆனா என் பொண் மாயாவுக்கு உன்னைத் தவிர வேறு யாரும் புருஷனா வரமுடியாது.... வரக் கூடாது...''

''எனக்குக் காரணம் தெரியலாமா?'' என்ற அவன் தொடர்ந்து, ''ஒரு பெரிய மல்டி மில்லியனர் தம் ஒரே பெண்ணை ஒரு சாதாரண என்ஜினியருக்கு, அதுவும் அவர்கிட்டேயே மாசச் சம்பளம் வாங்கற என்ஜினியருக்குக் கொடுக்கணும்னு பிடிவாதமா இருக்கார்னா, அது நிச்சயம் செத்துப் போனவர்களோட ஆத்மாக்களுக்கு நைவேத்தியம் செய்வதற்காக இருக்க முடியாது...'' என்றான்.

''கொஞ்சம் கரெக்ட்...''

மீண்டும் ஒரு சின்ன உறிஞ்சல்.

''என்னால் மாப்பிள்ளைகளை விலைக்கு வாங்க முடியும் அந்து... நான் விரல் அசைத்தால், பாம்பேயிலேயே எத்தனையோ தொழிலதிபர்கள் தங்கள் பிள்ளைகளை என் முன்னே நிறுத்துவார்கள்... ஆனா நான், ஏன், ஏன் உன்னை இத்தனை வருஷமாகத் தயார் பண்ணினேன்?''

அரவிந்தன் விழித்தான்.

''ரங்கனோட சவம் கெடக்கறப்ப நான் அழ வந்தேன். வந்த எடத்திலே உன் ஐ. ஐ. டி. பத்தி விசாரிச்சேன். அப்புறம், அப்புறம் என்னென்ன நடந்ததுன்னெல்லாம் உனக்கே தெரியும்...''

''நான் ரொம்பக் கடமைப்பட்டிருக்கேன் சார்... ஆனா நீங்க என் நன்றிக்கு ஒரு விலை பேசறீங்க... இது நியாயமா சார்?''

அரவிந்தனுடைய வார்த்தைகள் அவரைத் தாக்கின. ஆனால் முகம் இம்மியளவும் மாறவில்லை.

''உன்னுடைய கோணத்தில் நீ பார்க்கறப்ப அப்படித் தோணலாம், அந்து...! ஆனா, நீ என்னோட ஆங்கிள்ளே பாரு... எனக்கு யார் வேணும்னாலும் மாப்பிள்ளையா வரலாம். ஆனா, ஆனா என் பெண் மாயாவுக்கு அரவிந்தன் ஒருவன்தான் கணவனாக அமைய முடியும்!''

''ஏன் சார்? எனி ப்ராப்ளம்?''

''நீ அதிபுத்திசாலி, அந்து! ரொம்பக் கரெக்டாக் கேட்டுட்டே... யெஸ் தேர் இஸ் எ ப்ராப்ளம்... ஆனா நீ அவளுக்கு ஹஸ்பெண்டா வந்தா, அவ ப்ராப்ளம் ரொம்ப சீக்கிரம் தீர்ந்துடும்...''

''யூ மீன் மெண்ட்டல்?''

''ஸம் ஃபியர் காம்ப்ளக்ஸ். நார்மலா எட்டு மணி நேரம் இருந்தா, யார்கிட்டேயும் பேசாம எதுவும் சாப்பிடாம எட்டு மணி நேரம் சும்மா இருப்பா... பிடிச்சா சாப்பிடுவா... நெனைச்சாத் தூங்குவா... திடீர்னு சினிமாப் பார்க்கணும்னு அவளே காரை எடுத்துண்டு போவா... பாதி பாக்கறப்ப திடீர்னு எழுந்து வந்துடுவா... ஒரு கைக் குழந்தையைக் கவனிக்கக்கற மாதிரி அவளைக் கவனிச்சுக்கணும்... அதை இப்ப நான் செய்யறேன்... ராஜம்மா செய்யறா... ராஜம்மாக்குன்னுதான் பேரு... அவ எங்கள்ளே ஒருத்தி...''

அரவிந்தன் எழுந்தான்.

கால்கள் மரத்துப் போயின.

கண்முன் பல வருடங்களுக்கு முன் பார்த்த மாயா எனும் ஒரு சிறுமி ஸ்கிப்பிங் ரோப்புடன் சிரித்துக் குதித்தாள்.

பார்க்காத மாயாவின் கதி அவனுக்கு இப்போது ஒரு பொருட்டு அல்ல! ஆனால், பார்த்துப் பழகி, ஒரு மாபெரும் எதிர்பார்ப்புடன் இருக்கும் வசுமதியின் கதி?

திடீரென்று தாரக்ராம் மீது இதுவரை ஏற்பட்டிருந்த மதிப்பும் மரியாதையும் ஆயிரம் மடங்காகப் பெருகின.

''சார், நீங்க உங்க பெண்ணைப் பத்தி இவ்வளவு வெளிப்படையா, ஒளிவு மறைவு இல்லாமப் பேசின மாதிரி கோடியில ஒருத்தர் கூடப் பேசியிருக்க மாட்டார்...''

''நான் யாரையும் ஏமாத்தவோ, பணத்தாலே ஆசைகாட்டவோ விரும்பலே, அந்து... என் பெண் மாயா எனக்கு

---

அவன்: ''வீடியோ வந்த பிறகு டி. விக்கு மவுசு குறைந்துவிட்டது உண்மையா?''
இவன்: ''உண்மைதான்! என் வீட்டுக்கு ஓசி டி. வி. பார்க்க வந்துக்கிட்டிருந்த கும்பலில் பெரும்பகுதி இப்ப எதிர் வீட்டுக்கு ஓசி வீடியோ பார்க்கப் போயிடுது!''

டி. ராஜாஜி.



ஒரு மாணிக்கம்... நான் உசிரா இருந்த கோமளியின் மறு வடிவம்... நாங்க பெத்த மாணிக்கத்தை ஒரு சாதாரண மரப்பெட்டியிலே வைக்க எனக்கு மனசு வராது... ஒரு தங்கப் பேழைதான் தேடறேன்.''

''சார், மணி பத்து அடிக்கப் போறது.''

''சாப்பிடலாமா?''

''ஐ'ம் ரெடி சார்...''

''சாப்பிட்டப்புறம், நாம் கொஞ்சநேரம் உட்கார்ந்து பேசுவோம்... ஆனா மறுபடியும் மாயா பத்தி இல்லே! ப்ராமிஸ்!''... தாரக்ராம் சிரித்தார்.

அரவிந்தனும் சிரித்தான். ஆனால் உள்ளூற மாயா வாட்டினாள்.

இரவு சரியாகப் பன்னிரண்டு மணிக்குப் புறப்பட்ட அவன் வீட்டுக்கு வந்து படுக்கையில் விழுந்த போது மணி ஒன்று.

கண்களை மூடிக் கொண்டான். இமைகளுக்குள் ஒரு டென்னிஸ் ஆட்டம் ஆவேசமாக ஓடலாயிற்று. ஆடுகிறவர்களுடைய உருவங்கள் தெரியவில்லை. ஆனால் பெரிய மட்டைகள் தெரிந்தன. ஒரு மனித உருவம் பந்தாகத் தோன்றியது.

தான் சின்னஞ்சிறு டென்னிஸ் பந்தாக மாறி விட்டதை அரைத் தூக்கம், அரைப் பிரக்ஞையில் உணர்ந்த அரவிந்தன் எப்போது தூங்க ஆரம்பித்தான் என்பதையே அறியவில்லை.

மறுநாள் அதிகாலையில் எழுந்த உடனேயே வசுமதியின் நினைவுதான் மனத்தில் முட்டியது. தற்போதைக்கு மாயாவைப் பற்றி அவளிடம் எதுவுமே சொல்லக்கூடாது என்று தீர்மானித்துக் கொண்டான். மறு கணம், அவர் கொடுத்திருந்த நீண்ட உறை நினைவுக்கு வந்தது. காரிலிருந்து இறங்கும் போது உறையை எடுத்து வர அவன் மறந்திருக்கிறான்.

காப்பி குடித்துக் கொண்டே மாயாக்களைப் பார்க்க வேண்டும் என்ற எண்ணத்துடன் பல் தேய்க்கச் சென்றான். ஆல்பத்தை ஓட்டலிலேயே விட்டுவிட்டு வந்ததும் நினைவுக்கு வந்தது.

பால் காய்ந்து கொண்டிருக்கையில் டெலிபோன் மணி அடித்தது. காஸ் அடுப்பை அணைத்துவிட்டு டெலிபோனை எடுத்தான்.

''415545.''

''குட்மார்னிங், வசு ஹியர்...''

''ஐ'ஆம் வெரி வெரி ஸாரி, வசு... நான் உன் வீட்டுக்கு ஆறு மணிக்கு வந்தேன்... ஆறேகால் வரை காத்திருந்தேன்... வீடு பூட்டியிருந்தது...''

''அஷ்டலட்சுமி கோவிலுக்கும், ரத்னகிரீஸ்வரர் கோவிலுக்கும் எல்லோரும் போயிருந்தோம்... ஆர் யூ ஆல் ரைட், அர்விந்த்?''

''நான் நேற்று ஏன் வரமுடியாமப் போச்சுன்னு நீ இன்னும் கேட்கலே... கோபம் வந்திருக்குமே!''

''நெறையவே வந்தது... சாப்பிடக் கூட இல்லே... இப்பப் பசிக்கிறது...'' சிரிப்பு ஒலி கேட்டது.

''ஏன் வர முடியலே தெரியுமா?''

''உங்களையும் மீறி ஏதாவது தவிர்க்க முடியாத வேலே வந்திருக்கும்... ஆனா நான் ராத்திரி என்னவெல்லாமோ நெனைச்சுப் பயந்தேன்... எலெக்ட்ரிக் ஷாக், கார் ஆக்ஸிடெண்ட், இப்படி மனசு பயந்தது...''

''யூ ஆர் கரெக்ட் வசு, நான் ஒரு பெரிய விபத்திலே மாட்டிண்டேன். ஆனா அது எப்படிப் பாதிக்கப் போறதுன்னு இப்பத் தெரியலே... அதுசரி, எங்கேயிருந்து பேசறே...? உன்னைச் சுற்றி ஒரே சத்தமா இருக்கு?''

''ஏர்போர்ட்லேருந்து...''

''வாட்? அங்கே உனக்கு என்ன வேலே?''

''டெல்லி போயிண்டிருக்கேன்... சுப்ரீம் கோர்ட் ஒர்க்... ஸடன்...''

''ஃப்ளைட் ஆறுமணிக்கு ஆச்சே... இப்ப ஆறேகால்...?''

''ஒன் அவர் டிலே... நாளை மறுநாள் வரேன்... ஈவினிங் ஃப்ளைட்...''

''நான் வந்து உன்னை ரிஸீவ் பண்றேன் வசு!'' என்ற அரவிந்தனுக்கு, அவள் செல்லும் விமானத்தில்தான் தாரக்ராமும் செல்லுகிறார் என்ற ஞாபகம் வந்தது.

திடீரென்று பேச்சு நின்றது. லைன் கட்டாகி விட்டது என்ற எரிச்சலில் அரவிந்தன் பாலைக் காய்ச்ச நகர்ந்தான்.

அவன் தாரக்ராமுக்கு எந்த உறுதியும் அளிக்கவில்லை. மாயா மீது அவனுக்கு இரக்கம் ஏற்படலாம். ஆனால் வெறும் இரக்கம் எப்படித் தாம்பத்தியத்திற்கு மூல காரணமாக முடியும்?

வசுமதிக்காக அவன் காத்திருக்கிறான். அவளுடைய இரு மூத்த சகோதரிகளுக்குக் கலியாணம் ஆகும்வரை அவன் காத்திருக்க வேண்டி வரலாம். அல்லது அவர்களே தங்கள் தங்கைக்குப் பச்சைக் கொடி காட்டலாம். இந்த நிலையில் அவனால் எப்படி தாரக்ராமுக்கு உறுதி மொழி கொடுக்க முடியும்?

ஆனால் அந்த வாரமே யுத்த முனையில் திடீர்த் திருப்பம் ஒன்று ஏற்பட்டது.

(தொடரும்)

---

பூனாவில் குற்றவாளிகளைத் திருத்த அல்லது வழிக்குக் கொண்டுவரப் புதிதாக ஒரு முறையைக் கையாளப் போகிறார்கள். இதற்காக பூனா போலீஸ் படை சுமார் 40 மல்யுத்த வீரர்களை வேலைக்கு எடுத்திருக்கிறது. குற்றவாளிகளை இந்த மல்யுத்த வீரர்களுடன் மோத வைத்து அவர்களை வழிக்குக் கொண்டு வருவதுதான் திட்டமாம்!

கே. ஜி. எஃப் பழனிச்சாமி.



# செருப்புக்கு வந்த யோகம்

'கிரஹப்பிரவேசத்தின் போது வந்தீர்கள். அப்பொழுது வீடு முழுவதாகவில்லை. இப்போது எல்லாம் கட்டி முடிந்துவிட்டது. நீங்கள் வந்து பார்க்கவேணும்'' என்று நண்பன் என்னையும், என் மனைவியையும் அழைத்தான். சாதாரண நாளாக இருந்தால் ''சரிதான்'' என்று அவனிடம் மேம்போக்காகச் சொல்லியிருப்பேன். இப்பொழுது நானும் ஒரு சிறிய வீடு கட்டும் மும்முரத்தில் இருந்தேன்!

அடுத்த ஞாயிற்றுக்கிழமை எனது நண்பனின் புது வீட்டைப் பார்க்கப் போனோம்.

''கிரஹப்பிரவேசத்தின் போது ''மொஸைக்'' சரியாகவே பதிக்கவில்லை. இப்பொழுது நன்றாய் இருக்கிறதா?'' என்று கேட்டு, பகவானைப் பாதாதிகேசம் வர்ணிப்பார்களே, அதுபோல் தரையிலிருந்து மாடி வரையிலும் ஒவ்வொரு விஷயமாகச் சுட்டிக் காட்டினான்.

''இந்த நடராஜா விக்ரகம் ரொம்ப நன்றாய் இருக்கிறதே?'' என்று என் மனைவியின் கண் வெங்கலத்தில் செய்யப்பட்ட நடராஜ விக்ரகத்தின் மீது விழுந்தது.

அந்த நடராஜ விக்ரகத்தின் அடியில் விநோதமாகக் கன்னங்கரேலென்று பிளாஸ்டிக்கில் செய்யப்பட்டு, கோழி இறக்கைகளை ஆடையாக இடுப்பில் சொருகி நர்த்தனம் ஆடும் ஆப்பிரிக்க நடனமணிகள் பொம்மைகள்! நண்பரின் மனைவி காப்பி போட்டுக் கொண்டுவரச் சமையலறைக்குச் சென்றாள். நண்பர் வீடு கட்டுவதற்கு ஆன ஒவ்வொரு



சாமான் பில்லையும் தேடிக் கொண்டு வர உள்ளே சென்றிருந்தார்.

''லல்லு! இந்த ஆப்பிரிக்க நடனமணிகள் பொம்மைகளைப் பார்த்தாயா? இதை நடராஜா சிலையின் அடியிலா வைக்க வேண்டும்?'' என்று நான் மெதுவாக மனைவியின் காதில் கிசுகிசுத்தேன்.

''பேசாமல் இருங்கள்! அந்தப் பொம்மைகள் எவ்வளவு அழகாய் இருக்கின்றன. இந்தப் பத்தாம் பசலி டேஸ்ட் என்றும் உங்களை விட்டுப் போகாது. நம் வீட்டை அலங்கரிக்கும் போது நீங்கள் குறுக்கிடக் கூடாது'' என்று 144 தடை உத்தரவு போட்டாள். இத்தருணத்தில் என் நண்பர் மனைவி காப்பி கொண்டு வந்தாள்.

''மாமி! இந்த ஆப்பிரிக்கப் பொம்மைகளை எங்கு வாங்கினீர்கள்?'' என்று என் மனைவி கேட்க எனக்கு ஆத்திரம் பொத்துக் கொண்டு வந்தது. 'நடராஜா விக்ரகத்தின் அழகு தெரியவில்லை. ஆப்பிரிக்கப் பொம்மைகள் நன்றாய் இருக்கிறதாம்' என்று மனத்துக்குள்ளே சொல்லிக் கொண்டேன்.

''என் தம்பி நைஜீரியாவிலிருந்து அனுப்பினான். அடுத்த மாதம் வருவான். உங்களுக்கும் ஒரு செட் வாங்கிக் கொண்டு வரச் சொல்லட்டுமா?'' என்று கேட்டாள். என் மனைவியின் புளகாங்கிதத்தைப் பார்க்கணுமே. அந்த ஆப்பிரிக்க நடனமணிகளைக் கையில் எடுத்துத் தடவிக் கொடுத்து. ''இவை ரொம்ப ஜோர் மாமி!'' என்று மாமியின் அலங்காரத்தின் ரஸனையை எடுத்துச் சொன்னாள்.

மற்றொருபுறம் திரும்பினோம். ஒரு கண்ணாடி கேஸில் பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் மஹாவிஷ்ணுவின் பிம்பம். என் கண் அதிலேயே லயித்து விட்டது. அதன் பக்கத்தில் ஒயிலாக நிர்வாணத்தை மறைத்துக் கொண்டு படுத்திருந்த பெண்ணின் பொம்மை. எனக்கு விரசமாகப் பட்டது..''இந்த அலங்கோலத்தை வைக்கத் தான் வைத்திருக்கிறார்களே, மஹாவிஷ்ணுவின் பொம்மைக்குப் பக்கத்தில்தானா இதை வைக்க வேண்டும்?'' என்று நினைத்துக் கொண்டேன்.

எனக்கு ஒரு சவுக்கடி கொடுப்பது போல் என் மனைவி முந்திக்கொண்டு ''இந்த டிராயிங் ரூம் அலங்காரங்களெல்லாம் பிரமாதம்'' என்று பாராட்டிச் சொன்னாள்.

''இதைப் பார்த்தீர்களா?'' இவ்வளவு நேரமாக எங்கள் கண்ணுக்குப் படாத பொருளைச் சுட்டிக்காட்டினாள் நண்பர் மனைவி. நாங்கள் திரு. திருவென்று விழித்தோம்.

''அது திமிங்கிலத்தின் தாடை எலும்பு'' என்று அவள் விவரித்தாள். அதற்கென்று கண்ணாடியில் தனிப் பெட்டி ஒன்று! எனக்கு ஆத்திரம் பொத்துக் கொண்டு வந்தது. ''நம் நாட்டில் எவ்வளவு அழகழகான கைவண்ணப் பொருள்களிருக்கின்றன. ஆப்பிரிக்க நடனமணிகளாம்! திமிங்கிலத்தின் தாடை எலும்பாம்!'' என்று மனத்துக்குள் பொருமிக் கொண்டேன்.

இப்பொழுது என் நண்பர் கண்களில் ஆனந்தம் பொங்க ''எல்லாம் இவள் செலக்ஷன். நான் இம்மாதிரி விஷயங்களில் உள்நாட்டு இலாகாவில் குறுக்கிடறதே கிடையாது'' என்று பெருமிதத்துடன் சொன்னார். என் மனைவி என்னை அர்த்த புஷ்டியுடன் பார்த்தாள்.

பிறகு வீட்டை ஒவ்வொரு அறையாகப் பார்த்துக் கொண்டே வந்தோம்.

''ஏன் ஸார்! இவ்வளவு ஜோராக வீடு கட்டியிருக்கிறீர்களே. ஒரு பூஜை அறை இருந்தால் சொரம் வைத்தது போல் இருக்குமே!'' என்றேன்.

''அதற்கு என்று ஒரு அறை எதற்கு ஸார்? நாம் என்ன தினம் பூஜையா பண்ணுகிறோம். அது வேண்டுன்னு தோன்றிற்று. அதோ பாத்திரம் வைக்கிற அலமாரி இருக்கே. அதிலேயே ஒரு பலகையில் ஒண்ணு, ரெண்டு கடவுள் படத்தை வைத்தால் தீர்ந்தது. என்ன நான் சொல்றது?'' என்றார் நண்பர்.

''ஹி... ஹி... ஹி... ஆமாம்!'' என்று அசடுவழிய நின்றேன்.

நண்பரிடமும் அவர் மனைவியிடமும் விடைபெற்றுக் கொண்டு ரொம்ப ஆயத்தமாய் வாசல் கதவைத் திறந்தோம்.

''இதை நீங்கள் பார்க்கவில்லையே'' என்று என் மனைவி குனிந்து பார்த்தாள். நாய் படுப்பதற்கு இருப்பது போல் ஓர் அறை. நல்ல ஸன் மைக்கா போட்ட இரண்டு மூன்று பலகைகளில் செருப்பு வைக்கப்பட்டிருந்தது.

நாங்கள் கேட்பதற்கு முன்னமேயே என் நண்பரின் மனைவி ''எல்லோர் வீட்டிலேயும் செருப்பு வைப்பதற்குத் தான் பிரத்தியேகமான இடம் இருக்காது. ரோட்டு மண், சேறு எல்லாம் சேர்ந்தாலும் கலபமாகச் சுத்தம் செய்ய சன்மைக்கா போட்டு அந்த அறையைக் கட்டினேன்'' என்று விளக்கி, எங்களுக்கு விடை கொடுத்தார்.

நான் நாகரீகத்தின் போக்கை அசை போட்டுக் கொண்டே வந்தேன். ''பூஜை ரூம் கிடையாது. செருப்புக்கு வந்த யோகம் பார்த்தாயா'' என்று மனத் துக்குள் பொருமிக் கொண்டேன்.

''இதோ பாருங்கள். நாளைக்கே இன்ஜினியரைப் பார்த்து உங்கள் நண்பர் வீட்டில் இருந்தது போல் செருப்புக்கு ஒரு நல்ல அறையை மாடிப்படிக்கடியின் அடியில் கட்டச் சொல்லுங்கள். வேண்டுமானால், இன்ஜினியரை அவர் வீட்டிற்கு அழைத்துப் போய்க் காண்பியுங்கள். அவர்கள் வீட்டிலேயே எனக்கு ரொம்பவும் பிடித்திருந்தது செருப்புக்கென்று தனி இடம்; ஹாலில் வைத்திருந்த அலங்காரங்கள்'' என்று என் மனைவி வீட்டு பிளானில் முக்கியமாகச் செய்ய வேண்டிய மாறுதலைச் சொன்னாள்.

வாழ்க்கையை மேம்படுத்தத் தற்காலத்தில் எது அதி முக்கியம் என்று தெரிந்து கொண்டேன்!

# நெருப்பு மலர்

**28**

இந்துமதி

மேஜர் ஜெனரல் பிரார் சொல்ல முடியாத ஒரு குழப்பத்திலும் தவிப்பிலும் இருந்த போது புதுடில்லி மேலிடத்திலிருந்து இன்னொரு கேள்வி கேட்கப்பட்டது.

"தோஹ்ராவும், லோங்கோவாலும் எங்கே?"

அந்தக் கேள்விக்குக் குல்திப்சிங் பிராரால் உடனே பதில் சொல்ல முடியவில்லை. அவருக்கே அவர்களின் இருப்பிடம் தெரியவில்லை. ராணுவ நடவடிக்கை எடுக்கப்படுவதற்குமுன் அவர்கள் இரண்டு பேரும் பொற்கோவிலினுள் குருநானக் நிவாஸில் இருந்தார்கள் என்கிற விவரம் கிடைத்திருந்தது. அதன்பின் எங்கே போனார்கள் என்கிற விவரம் எதுவும் கிடைக்கவில்லை. நிச்சயம் பொற்கோவிலை விட்டு வெளி வந்திருக்க முடியாது. உள்ளேதான் எங்கோ இருக்க வேண்டும். அதனால்—

"இதோ உடனே அவர்களைக் கண்டு பிடிக்கச் சொல்கிறேன்..." என்று சொல்லி விட்டு வேகமாக உள்ளே போனார் பிரார்.

அர்ஜுனைக் கூப்பிட்டு,

"அர்ஜுன்! தோராவும், லோங்கோவாலும் எங்கே இருக்கிறார்கள் என்பதைக் கண்டுபிடித்து உடனே டில்லிக்குச் செய்தி



யனுப்ப வேண்டும் அர்ஜுன்...'' என்று பர பரக்க, உடனே செயல்பட்டான் அர்ஜுன்.

உடனடியாக அதிகாரி ஒருவரை அழைத்துக் கொண்டு, தகுந்த பாதுகாப்புடன், பொற்கோவிலுக்குள் நுழைந்து, மெதுவாகத் தேட ஆரம்பித்தான். ஹர் மந்திர் சாஹிப், குருநானக் நிவாஸ், எல்லா இடங்களிலும் தேடிக் கடைசியில் ஒரு பெரிய மரக்கதவால் மூடப்பட்டு வெளிச்சமோ, வெளி சத்தமோ வராத தோராவின் அறைக்குள் லோங்கோவால் இருப்பதைப் பார்த்தான். உள்ளே நுழைந்ததும் அவரோடு தோஹ்ராவும், பல்வந்த்சிங் ராமூவாலியாவும், அவர்களைத் தவிர கிட்டத்தட்ட 30 நபர்களும் அடைபட்டுக்கிடந்தனர். சுமார் 30 மணி நேரங்களுக்குமேல் குடிதண்ணீரும் உணவும் இன்றி இருந்திருக்கின்றனர். ஜூன் 3-ம் தேதியே ராணுவத்தினர் பொற்கோவிலுக்குத் தண்ணீர், மின்சாரம் இல்லாதவாறு கத்தரித்து விட்டிருந்தனர்.

அந்த இருட்டில் அவர்களைக் கண்டு பிடித்த உடனே அர்ஜுன் கேட்டான்.

''நாங்கள் சரணடையச் சொல்லி மெகோஃபோன் மூலம் அறிக்கை விடுத்து, நேரமும் கொடுத்தோமே... அப்போது நீங்கள் ஏன் சரணடையவில்லை...?''

''நாங்கள் இந்த அறைக்குள் வந்து இவ்வளவு பெரிய கதவை இழுத்துச் சாத்திக் கொண்டு விட்டதால் எங்களுக்கு உங்கள் அறிக்கை காதில் விழவில்லை. உங்கள் அறிக்கை மட்டுமில்லை. வெளிச் சத்தம் எதுவுமே கேட்கவில்லை. இல்லாவிட்டால் நீங்கள் மெகோஃபோனில் அறிவித்த உடனே சரணடைந்திருப்போம்...''

''சரி, இப்போது எங்களுடன் வெளியே வாருங்கள்...''

''ஒரு நிமிடம்...'' என்ற லோங்கோவால், ராமூவாலியாவைக் கூப்பிட்டுத் தற்போது தங்களுடன் வர வேண்டாமென்று சொல்லி, அறைக்குள்ளிருந்த நானூறு பக்தர்களைப் பாதுகாக்கும் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தார். பின்னர் அவரும், தோராவும், அமர்ஜித் கவுரும் அர்ஜுனிடமும், மற்றொரு அதிகாரியிடமும் சரணடைந்தபோது—

பக்தர்களோடு ஒன்றாகக் கலந்து நின்றிருந்த தீவிரவாதிகள் சிலர் சரசரவென்று சமுந்தரி ஹாலின் மேலே ஏறிப் பக்தர்களையும், லோங்கோவால், தோராவையும் நோக்கிச் சுடத் தொடங்கினர். இதை எதிர் பார்க்காத அர்ஜுன் அவர்களை உடனே குண்டு படாமல் பாதுகாக்கக் கூடிய ராணுவ வண்டியில் ஏற்றி வேகமாக வண்டியைச் செலுத்தச் சொல்லி, மிக சாமர்த்தியமாகப் பொற்கோயிலை விட்டு வெளியில் கொண்டு வந்துவிட்டான்.

வண்டி வெளியில் போன மறுவினாடி ராணுவச் சிப்பாய்கள் சமுந்தரி ஹாலுக்குள் நுழைந்து கலகக்காரர்களைச் சுடத் தொடங்கினர். இந்தத் துப்பாக்கிப் பிரயோகத்தில் கிட்டத்தட்ட முப்பத்தைந்து பெண்கள், பத்து குழந்தைகள் உட்பட நூறு பக்தர்களுக்குமேல் இறந்து போயினர்.

அதற்குப் பின்னர் சண்டை இன்னமும் தீவிரமடைந்தது. ஹர்மந்திர் சாஹிப் குண்டு வீச்சில் சிதிலமடைந்தது. தீவிரவாதிகளுக்கு உயரமான இடங்களிலிருந்து கீழே இருக்கிற ராணுவ வீரர்களைச் சுடுவது சுலபமாக இருந்தது. அதனால் ராணுவத் தரப்பில் உயிர்ச் சேதம் அதிகமாயிற்று. அதற்குமேலும் தரையின் மறைவிடமற்ற இடத்திலிருந்து சண்டையிடுவது விவேகமற்ற செயலாகப் பட ராணுவ வீரர்கள் திருப்பி அழைக்கப்பட்டனர். அன்று மாலை சூரிய அஸ்தமனத்திற்குப் பின்னர் ராணுவ வீரர்கள் தாக்குதலை நிறுத்திக் கொண்டனர்.

ராணுவ தரப்புச் சேதத்தைக் கேள்விப்பட்ட மேஜர் ஜெனரல் பிரார் இதற்குமேலும் தரையிலிருந்து தாக்குதல் நடத்துவது சாத்தியமில்லாதது என்ற முடிவிற்கு வந்தார். இனி பாட்டன் டாங்குகளை உபயோகிப்பதைத் தவிர வேறு வழியில்லை என்று நினைத்தார். இதற்காக ராத்திரி பதினொரு மணிக்கு மேல் சுந்தர்ஜியைத் தொலைபேசியில் அழைத்து டாங்குகளை உபயோகிக்க அனுமதி கேட்டார்.

ஆனால் சுந்தர்ஜி உடனே அதற்கு சரி சொல்லிவிடவில்லை. நிலைமையை நேரில் பார்த்த பின்னரே அனுமதி வழங்க முடியும் என்று சொல்லி, சரியாக நடுராத்திரி 2.30 மணிக்குப் பஞ்சாப் வந்து இறங்கினார். தானே பொற்கோவிலைச் சுற்றிப் பார்வையிட்டு நிலைமையைக் கவனித்த பின்னர், வேறு வழி எதுவும் இல்லாமற் போகவே

டாங்குகளை உபயோகிக்கச் சொல்லி அனு மதி கொடுத்தார். உடனே டாங்குகளை உள்ளே அனுப்புவதற்கான திட்டங்கள் வகுக்கப்பட்டன.

மறுநாள் அதிகாலை நான்கு மணிக்கு குரு ராம்தாஸ் சராய் வழியாக முதல் டாங்கியை உள்ளே அனுப்பினார் பிரார். அந்த டாங்க் உள்ளே நுழைந்த உடனே அகல்தக்த்தி லிருந்து ஆன்டி—டாங்க் ராக்கெட் வீசப் பட்டதைப் பார்த்து பிரார் அதிர்ந்து போனார். இதை அவர் சிறிது கூட எதிர் பார்க்கவில்லை. ஒரு பெரிய பூதம் போலவும், மலை மாதிரியும் நகருகிற டாங்க்குகளை எதிர்க்கக் கூடிய நவீனப்போர் ஆயுதங்களைத் தீவிரவாதிகள் எங்கிருந்து சேகரித்து எப்படி உள்ளே கொண்டு போனார்கள் என்கிற பிர மிப்பு ஏற்பட்டது.

அந்த முதல் **APC** சிதிலமடைந்தது. அதற்குப் பின்னர் பிரார் சிறிதுகூடத் தயங் காமல், தாமதிக்காமல் அதே வழியாக ஒன்றன்பின் ஒன்றாக ஏழு டாங்குகளை உள்ளே அனுப்பினார். டாங்குகள் நுழைந்த தில் பரிக்ரமாவின் பளிங்குக் கற்களால் கட்டப்பட்ட படிகள் மளமளவென்று உடைந்தன. டாங்க்குகளின் கனம் தாங் காமல் தரையும், கட்டிடங்களும் விரிசல் கண் டன. டாங்க்குகள் உள்ளே நுழைகிற போதே மீண்டும் ஒருமுறை தீவிரவாதிகளைச் சரண டையச் சொல்லி அறிக்கை விடப்பட்டதில் கிட்டத்தட்ட இருநூறு தீவிரவாதிகள் மட் டுமே சரணடைந்தனர். மேலும் தீவிரவாதி களுக்குச் சரணடைய நேரம் ஒதுக்குவதற் காக உள்ளே நுழைந்த டாங்க்குகள் சுடத் தொடங்காமல் பேசாமல் நின்றிருந்தன.

ஜூன் 6—ம் தேதி மத்தியானம் வரை காத்திருந்தும் பலன் இல்லாமற்போகவே டாங்க்குகளிலிருந்து தாக்குதல் ஆரம் பிக்கப்பட்டது. அதேசமயத்தில் தன் படைப்பிரிவினருடன் மரத்தடியில் ஒளிந் திருந்த அர்ஜுன் அகல்தக்த்தின் ஒரு பிரிவிற் குள் நுழைந்து தன் தாக்குதலைத் துவங்கினான்.

தாக்கத் துவங்குமுன் ஒரு விநாடி அப்பா வையும், கிருத்திகாவையும் நினைத்துக் கொண்டான். தன் மனத்திலும், உடம்பிலும் வீரத்தை ஊட்டி ஊட்டி வளர்த்த ராம்சிங்கை நினைத்துக் கொண்டான். இந்த நிலைமையில் ராம்சிங் தன்னைப் பார்த்தால் எவ்வளவு சந் தோஷப்படுவான் என்று தோன்றிற்று. தன்னைக் கட்டி அணைத்து ஒருமுறை அழுத்தி முத்தமிடுவான். 'அச்சா சோட்டா ஸாப்... பஹூத் அச்சா...' என்று முதுகில் தட்டிக் கொடுப்பான்...''

அப்போது ராம்சிங் தட்டிக் கொடுக்கிற உணர்வுடன் இன்னும் மேலே நகர்ந்து அவனது இயந்திரத் துப்பாக்கி படபட வென்று இயங்க ஆரம்பித்தது...

வெளியில் பாட்டன் டாங்க்குகளின் அதிபிரகாசமான முன் விளக்குகளை எரிய விட்டு எதிரிகளின் கண்களைக் கூச வைத்துக் கொண்டே பிராரும் தாக்குதலில் முன்னே றினார்...

கிட்டத்தட்ட பதினொரு மணிவரை தொடர்ந்த தாக்குதலுக்குப் பின் அகல்தக்த் திற்குள்ளிருந்து ஒருவன் மிக வேகமாக நிஷான் ஸாஹிபிற்கு ஓடிவந்து துப்பாக் கியை மேலே தூக்கி வானத்தைப் பார்த்துச் சுட, உடனே ராணுவ வீரர்கள் சட்டென்று தங்கள் தாக்குதலை நிறுத்தினர். வெளியில்







" நான் அந்த வாயாடியைக் கேட்கிறேன். "உனக்கு என்ன தகுதி இருக்கிறது, இந்தத் தொகுதியில் எனக் கெதிராகப் போட்டியிட? என்னைப் போல் பட்டதாரியா? நீ பத்து வருடம் மக்களுக்காக உழைத்தாயா? இல்லை என்னைப்போல் பத்து ராகமாலிகா புடவைகளை யாவது வைத்து இருக்கிறாயா?......"
UMA FEATURES



பியூன் டைப்பிஸ்டிடம்:
''மேடம், இது ரொம்ப அவசரமான லெட்டராம். அதனாலே மானேஜர், இதைக் கையாலேயே எழுதி வாங்கிட்டு வரச் சொன்னார்... டைப் பண்ணிக்கிட்டு நேரத்தை வேஸ்ட் பண்ண வேண்டாமாம்...!''
—அ. தெய்வசிகாமணி.

வந்து வானத்தைப் பார்த்துச் சுட்டவன் பிந்தரன்வாலேயினால் அனுப்பப்பட்ட சமாதானத் தூதுவனாகத்தான் இருப்பான் என்று நினைத்தனர். ஆனால் சமாதானத்திற்கான வெள்ளைக் கொடி அவன் கையில் இல்லாததால் சந்தேகமும் பட்டனர். அவனை நம்ப முடியாமல் ராணுவ வீரர் ஒருவர் அவன் காலைப் பார்த்துச் சுட, அந்த மனிதன் கீழே விழுந்ததும், உள்ளேயிருந்து நிறைய தீவிரவாதிகள் ஓடி வந்து கண்ணிமைக்கும் நேரத்தில் அவனைச் சரசரவென்று உள்ளே இழுத்துக் கொண்டு ஓட முயல, இதனை எதிர்பார்க்காத ராணுவ வீரர்கள் சுட ஆரம்பித்ததில் தீவிரவாதிகளில் பலர் சுருண்டு விழுந்தனர்.

ஒருபக்கம் தீவிரவாதிகளால் விசிறி எறியப்பட்ட வெடிகுண்டு விலைமதிப்பற்ற புத்தகங்களும், பல சீக்கிய மதகுருமார்களின் கையெழுத்துக்களும் இருந்த நூலகத்தின் மீது விழுந்து எரிந்து கொண்டிருக்க, இன்னொரு பக்கம் இடைவிடாத துப்பாக்கிச் சத்தமும் சாவு முனகல்களுமாகப் பொற்கோவில் யுத்த களமானதற்குப் பின்னரே—

அகல்தக்த்திற்குள்ளிருந்து வந்த தாக்குதல் சற்று மிதப்பட்டது. ஆனாலும் அகல்தக்த்தின் அடித்தளத்தில் பிந்தரன்வாலேயின் இருப்பிடத்தில் ஆர்ப்பாட்டக்காரர்கள் ஓயவில்லை. அந்தப் பகுதிக்குள் தன் படைப்பிரிவில் மீதமிருந்த மிகச்சில வீரர்களுடன் உள்ளே நுழைந்தான் அர்ஜுன். அவனது இயந்திரத் துப்பாக்கி மிகமிகத் தீவிரமாகவும், ஆக்ரோஷமாகவும், வேகமாகவும் இயங்கிக் கொண்டே இருந்தது. அவனோ, அல்லது அந்தத் துப்பாக்கியோ சிறிதும் சோர்வடையவில்லை; களைப்படையவில்லை; சலித்துப் போகவில்லை; சோம்பி நிற்கவுமில்லை...

நள்ளிரவுக்குப் பின்னர் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே வந்த துப்பாக்கிச் சத்தம் முற்றிலும் குறைந்து ஓய்ந்தே போயிற்று. பொற்கோவிலினுள் துல்லியமாய் ஒரு அமைதி ஏற்பட்ட பின்னர் மேஜர் ஜெனரல் பிரார் சில ராணுவ வீரர்களை அழைத்துக் கொண்டு அகல்தக்த்தின் அடித்தளத்திற்குள் நுழைந்து வெளிச்சத்தை ஏற்படுத்திப் பார்த்த போது சற்று தூரத்தில் பிந்தரன்வாலேயின் உயிரற்ற உடம்பு விழுந்து கிடந்தது. அதற்குச் சற்றுத் தள்ளி தீவிரவாதிகளுக்கு ராணுவப் பயிற்சியளித்த ஷாபெக் சிங்கின் சடலம். பக்கத்திலேயே பிந்தரன்வாலேயின் நெருங்கிய நண்பர் அம்ரிக்சிங்கின் சடலம்... அதுதவிர தாறுமாறாக விழுந்து கால்களில் இடறிய அடையாளம் கண்டுபிடிக்க முடியாத முப்பத்தொரு சடலங்கள்...

சொல்ல முடியாத துயரத்துடனும், ஒரு ஆழமான பெருமூச்சுடனும் பிரார் தன் வலது புறங்கையால் நெற்றி வியர்வையையும், முகத்தையும் துடைத்துக்கொண்டு அந்த இடத்தை விட்டு வெளியேறத் திரும்பின போது—

அகல்தக்த்தின் அடித்தள வாசலின் குறுக்காக, இயந்திரத் துப்பாக்கியை இறுகப் பிடித்த நிலையில், காப்டன் அர்ஜுனப்பாவின் உடல்...

மனதை ஆழமாகத் தாக்கிய அதிர்ச்சியில் குலுங்கிப் போனார் பிரார். கண்களில் நீர் வரவில்லையே தவிர உள்ளுக்குள் கரை புரண்டு ஓடிற்று. அத்தனை உணர்வுகளும் அடித்துக் கொண்டு போய் வெற்றிடமாக மெதுவாகக் கீழே குனிந்தார் அவர்.

'என் இனிய நண்பனே, இளம் வீரனே, போய் விட்டாயா...?'

ஒரு விநாடி மௌனமாய் அஞ்சலி செலுத்துகிற மாதிரி நின்று பின்னர் பக்கத்தில் உட்கார்ந்து தன் வலது கையால் அர்ஜுனின் கண்களை மூட முயன்றார்.

முடியவில்லை. இமைகள் இயக்கமற்று இறுகிக் கிடந்தன. அதிலிருந்து அர்ஜுன் இறந்துபோய்ச் சில மணிநேரங்கள் ஆகியிருக்க வேண்டும் என்ற முடிவுடன் எழுந்து வெளியில் வந்தபோது மேஜர் ஜெனரல் பிராரின் நடை தளர்ந்து போயிற்று. மனம் சொல்லி முடியாத அளவில் கனத்துக் கிடந்தது. ராணுவ முகாமிற்குத் திரும்பியவர் டில்லிக்குச் செய்தி சொல்வதற்காகத் தொலைபேசியைக் கையில் எடுத்தார்...

(தொடரும்)

# தந்தி மறைப்பது நன்றன்று!

ராஜாராமன் குளிக்கப் போன போது அந்தத் தந்தி வந்துவிட்டது. 'சிவராமன் ஸீரியஸ். ஸ்டார்ட் இமீடியட்லி.'

இது மூன்றாவது தந்தி. இதற்கு முன் வந்த இரண்டு தந்திகளுக்கும் அலறிப் புடைத்துக் கொண்டு இந்தப் போபால் கோடியிலிருந்து திருச்சிக்குப் போய் வந்தாகி விட்டது. ராஜாராமனுக்கு அப்பா மீது பிரியம் அதிகம். அதனால் தந்தி கண்டதும் கண் கலங்கி விடுவான். உடனேயே இருக்கிற பணத்தை அள்ளிக் கொண்டு ஃப்ளைட்டில் எப்படியாவது திருச்சி போய் விடுவான்.

சிவராமன், மூன்று பிள்ளைகளுக்குத் தந்தை என்கிறதைத் தவிர வேறு அந்தஸ்து இல்லாதவர். அவருக்குப் பெரிய பிள்ளை வரதராஜனின் இருப்பிடத்தைத் தவிர வேறு எங்கும் ஒத்துக் கொள்ளவில்லை, அவர் உடல்நிலை அப்படி. ராஜாராமன் பல தடவை அவரை போபாலுக்கு அழைத்திருக்கிறான். ''ரொம்ப தூரம்டா, ராஜாராமா! இந்த எழுபது வயசுக்கு நான் அங்கே வந்து மண்டையைப் போட்டால் எல்லாருக்குமே உபத்திரவமாயிடும்...''

**ஷைலஜா**

சிவராமன் சுபாவம் அப்படி. தன்னால் யாருக்கும், எப்போதும் தொந்தரவு ஏற்படுவதை விரும்பாதவர்.

சிவராமனுக்கு மாரடைப்பு வந்து தந்தி கிடைத்துப் போய் வந்ததும், ''என்னவாம், அப்பாவிற்கு?'' என்றாள் அகிலா.

ராஜாராமன் கவலையாய்ச் சொன்னான். ''இந்தத் தடவை அப்பா பிழைத்ததே புனர்ஜென்மம். திரும்ப ஒரு தடவை இந்த மாரடைப்பு வந்தால் உயிருக்கு உத்தரவாதம் தருவதற்கில்லைன்னு டாக்டர் சொல்லிட்டார்...''

அகிலா, ஈரக் கையைப் புடவைத்தலைப்பில் துடைத்தபடி சற்றுமுன் வாங்கின அந்த மூன்றாவது தந்தியோடு ஹாலிற்கு வந்தாள். பாத்ரூம் பக்கம் மெல்ல எட்டிப் பார்த்தாள். ஷவரின் சத்தம் சீராய்க் கேட்டது. ராஜாராமனுக்குக் குளியல் சற்று சுவாரஸ்யமான விஷயம். நிச்சயம் குளித்து முடிக்க இன்னும் பத்து நிமிஷமாகும்.

வாசல் அறையில் குழந்தைகள் ஆதித்தும், அனுராதாவும் யூனிஃபாரம் போட்டுக் கொண்டு பள்ளிக்குத் தயாரானார்கள்.

'குழந்தைகள் பள்ளிக்கூடம் போகட்டும். 'இவர்' ஆபீஸ் போகட்டும். தந்தியை மறைத்து விடலாம். இரண்டு மாசத்திற்கு ஒரு தடவை இதே மாதிரி ஒரு தந்தி. இதற்கு ஆயிரம், இரண்டாயிரம் என்று



வெட்டியாய் ரயிலுக்கும், விமானத்துக்கும் தண்டச் செலவு. வேறு வேலையில்லை...'

அகிலா, தந்தியை மடித்துக் கைக்குள் அடக்கியபடி உள்ளே வந்தபோது, ''பாபீஜி!'' என்று எதிர்வீட்டு மஞ்சரிமல்ஹோத்ராவின் 'கீச்சுக்'குரல் வெளியே கேட்டது.

அகிலா சட்டெனத் திரும்பினாள். காலை எட்டு மணிக்கு மஞ்சரி வீட்டுக்கு வருகிறாள் என்றால் சண்டிப்பாய் மல்ஹோத்ரா இன்றைக்குக் கம்பெனிக்கு 'கட்டி' போடுகிறார் என்று அர்த்தம். கம்பெனிக்குப் பக்கத்தில் ஊழியர்களின் குவார்ட்டர்ஸ் இருப்பதால் ஒருவருக்கொருவர் இப்படி லீவ்–லெட்டர் கொடுப்பது முதல் பல விஷயங்களுக்கு உதவிக் கொள்ள முடிகிறது. ராஜாராமன் பணிபுரியும் அந்தக் கம்பெனியில் பூச்சி மருந்து தயாரிக்கிறார்கள்.

மஞ்சரி கொடுத்துப் போன லீவ் லெட்டருடன் திரும்பவும் அகிலா ஹாலிற்கு வந்தபோது ராஜாராமன் குளித்து முடித்து வந்திருந்தான். அவனைக் கண்டதும் சரேலெனத் தந்தியை ரவிக்கைக்குள் திணித்துக் கொண்டாள்.

''யார் வந்தா? பேச்சு சத்தம் கேட்டதே?'' என்றான், ராஜாராமன், தலையைத் துவட்டியபடி.

''மஞ்சரிதான். மல்ஹோத்ராவுக்கு வழக்கம்போல வயத்துவலியாம். லீவு போட்டிருக்கார். இதோ லீவு லெட்டர்...''

---

'ராக் மியூசிக்' பாடகர்களை விட 'கிளாஸிக்கல் மியூசிக்' பாடகர்களே ஆரோக்கியமாக இருக்கிறார்கள் என்பது ஒரு கணக்கெடுப்பில் தெரிய வந்திருக்கிறது. 'ராக் மியூசிக்' பாடகர்களில் 82 சதவிகிதத்தினர் நரம்பு மண்டல நோயாளிகளாக இருக்கிறார்கள். 87 சதவிகிதம் பேருக்கு தோல் நோய் இருக்கிறது. 62 சதவிகிதத்தினர் கலசக்காரர்களாக இருக்கிறார்கள். 39 சதவிகிதத்தினர் தூக்கம் இன்மையால் அவதிப்படுகிறவர்களாக இருக்கிறார்கள். 22 சதவிகிதத்தினர் தலைவலி நோய் உள்ளவர்களாக இருக்கிறார்கள் என்கிறது இந்தக் கணக்கெடுப்பு.

கே. ஜி. எஃப். பழனிசாமி.



அகிலா நீட்டிய காகிதத்தை விநோதமாய்ப் பார்த்தபடி வாங்கினான் ராஜாராமன். ஒருகணத்தில் அகிலாவிற்குத் தன் தவறு புரிந்து போனது. அவசரத்தில் மஞ்சரி கொடுத்த லீவு லெட்டரை ரவிக்கைக்குள் மறைத்து, தந்தியை ஏந்திய கையை நீட்டி விட்டாள். உண்மைக்கு ஒளிந்து கொள்வது பிடிக்காதோ?

புருவத்தை நெறித்தபடி தந்தியைப் பிரித்தான், ராஜாராமன். அடுத்தகணமே: ''அகிலா!'' என்று வீறிட்டுவிட்டான்.

''சீக்கிரம் நீயும், குழந்தைகளும் ரெடி ஆகுங்கள். உடனே திருச்சி புறப்பட்டாகணும்...'' பதறினான்.

அகிலா சற்றுத் தயக்கத்துடன், ''ஒன்றும் இருக்காது... வழக்கம்போல மார்வலியாய் இருக்கும்...'' என்றாள்.

''ஷட் அப்... அப்பாவுக்கு இது மூணாவது அட்டாக். அவரை நல்லபடியாய்ப் பார்த்தால் அது நம் பாக்கியம். நீ சீக்கிரம் நாலு துணியோடு ரெடி பண்ணு... நான் போய் ஃபாக்டரிக்கு லீவுக்குச் சொல்லிட்டுத் திரும்பிடறேன்...''

ராஜாராமன் பறந்தான். பல்லைக் கடித்தாள், அகிலா.

எல்லோருமாக ஃப்ளைட்டில் டில்லி, சென்னை வழியே திருச்சி வந்த போது சிவராமன் இறந்திருந்தார். ராஜாராமன் அப்பாவின் முகமுழியாவது கிடைத்ததே என்று திருப்திப்படுவதைத் தவிர வேறு வழியில்லாமல் வருந்தினான்.

இரண்டு நாளுக்குப் பிறகு...

அசிரத்தையாகச் செய்தித் தாளைப்பிரித்த ராஜாராமன் முதல் பக்கத்தில் கொட்டையாய்ப் பிரசுரமாயிருந்த அந்த வரிசையைத் திடுக்கிட்டுப் பார்த்தான். பிறகு எல்லோரையும் கூப்பிட்டு வாய்விட்டு உரக்கப் படித்தான்.

'போபாலில் தொழிற்சாலை ஒன்றிலிருந்து வெளியேறிய விஷவாயு நகருக்குள் பரவியது. அந்த விஷ வாயுவை சுவாசித்த அனைவரும் உடனே மயக்கமாகிச் சில நிமிஷங்களில் இறந்தனர்... போபால் நகரில் பூச்சி மருந்து தயாரிக்கும் 'யூனியன் கார்பைடு' என்ற தொழிற்சாலை உள்ளது. இந்தத் தொழிற்சாலையின் சுற்றுப்புறப் பகுதிகளில் வசிக்கும் அனைவரும் விஷவாயு தாக்கி மூச்சுத் திணறி இறந்தனர்....'

ராஜாராமன் படித்து முடித்ததும் அகிலா தாங்க முடியாமல் அலறிவிட்டாள்! ''ஐயையோ! அந்தத் தொழிற்சாலையில் தானே நீங்க வேலை பார்ப்பது? அதற்குப் பக்கத்தில் தானே நமது குடியிருப்பு? கடவுளே... நாம் மட்டும் அந்த விஷவாயு பரவிய சமயம் அங்கிருந்திருந்தால்...?''

''இந்நேரம் கூண்டோடு கைலாசம் போயிருப்போம். அகிலா, நம்மையெல்லாம் அப்பாதான் காப்பாற்றி விட்டார். இருக்கிறவரைக்கும் யாருக்கும் உபத்திரவம் தராதவர், இறந்த பிற்பாடும் நம் உயிரைக் காப்பாற்றி உதவி செய்திருக்கிறார்...''

''வாஸ்தவம்!'' என்று அகிலா சொன்னபோது, அவள் குரல் நெகிழ்ந்திருந்தது.





# கிராமத் திருவிழா

ச. தேனம்மை
இறுதியாண்டு, வேதியல்
பாத்திமாக் கல்லூரி
மதுரை

கட்டை வண்டி
சக்கர இதழ்களினால்
ரோட்டுக் காதலனை
முத்தமிடும்.

புழுதி
உல்லாசமாய்...
விசிலடித்துப் பறக்கும்.

மந்தைகள்
மஞ்சள் பூசிக்குளித்துக்
குங்குமமிட்டு
மங்கலப் பெண்களாக
வரும்...

பூசாரி சாமிக்கு
நெற்றியில் குங்குமம்
அப்பி
அனைவரையும் பயமுறுத்து
வான்...

கிளிகள்
நெல்மணிக்காகக்
காகிதம் பொறுக்கும்...

ராட்டினங்கள்
பூமிக்குத் தலையைச்
சுற்ற வைக்கும்...

ராக்காயி
மக்களுக்கு
இலவசமாய்
இனிப்புத் தருவான்...

முனியப்பன்
எச்சி தொட்டுப்
பிள்ளைகளுக்கு
கடிகாரம், செயின்
(ஜவ்வு மிட்டாயில்)
பண்ணிப் போடுவான்...

வருங்கால நம்பிக்கை
நாயகர்கள்
அப்பன்களின்
தோளிலேறி
சாமி பார்ப்பார்கள்...

மங்கிப் போன
நீலட்டியின் முன்
கரகக்காரிகள்
நடனம் நெளிப்பார்கள்...

பிள்ளைகளையும்,
பொருட்களையும்
மனிதர்கள்
காணாமல் அடிப்பார்கள்.

பூசாரி
அரிவாளையும்
பலிக்கல்லையும்
இரத்தத்தால்
குளிப்பாட்டுவான்...

மனிதர்கள்
மாமிசம் உண்ண
வேண்டியே
'கிடா' வளர்த்துத்
திருவிழாவை
வரவேற்பார்கள்...!







# அவளின் கவிதைகள்

ஆர்.கே.பத்மா

சாயங்கால நேரங்களிலும்
சலித்திருந்த பொழுதுகளிலும்
பாயும் நதி ஓடைபற்றி
பளிங்கு நிலா மேகம் பற்றி
உள்ளம் ஒன்றி
உதடுகள் குவிந்து
அவள்
மாய்ந்து மாய்ந்து
எழுதியதைக் கவிதையென்று
மயங்கியதுண்டு!

அப்பாவுக்கு
சில தாள்கள் நஷ்டம்!
அண்ணனுக்கு
அவள் அரைக்கிறுக்கு!
அம்மாவின்
கைப்பிடித் துணிக்கோர் மாற்று!
தம்பிக்குக்
கிடைத்தது காகிதக் கப்பல்!

அவளின் அந்தப்
பச்சை அட்டை நோட்டுப்
பொக்கிஷத்தை ஆராய்ந்தபின்
கனிவுடன் சிரித்தான்.
''எப்படி இருக்கு?''
என்றவளின் கரத்தை
இதழ்களால் ஒற்றினான்.

''உன் பேச்சின் இனிமையும்
எண்ணத்தின் உயர்வும்
இதயத்தின் மென்மையும்தானே
இங்கே பூத்திருக்கிறது!''
அன்றுதான்...
அவளின்
மனச்சிற்பங்கள்
உயிர் பெற்றன!

அந்த இன்பத்தில்
அவளே கவிதையானாள்.
அந்த ரசிகன்
ஆழ்ந்து
படிக்கலானான்...

ஆர். கே. பத்மா,
எம். காம், இரண்டாம் ஆண்டு
பிரசிடென்சி கல்லூரி, சென்னை.





**அரக்கு**

பண்டைய நாளிலிருந்தே இந்தியாவில் உபயோகப்படுத்தும் இதனை ஆங்கிலத்தில் (LAC) லாக் என அழைக்கின்றனர். இதன் பொருள் 'லட்சம்' என்பது. லட்சக்கணக்கான பூச்சிகள் இதனைத் தயாரிப்பதால் இப்பெயர் வந்ததாம். 'லாக்கிபர்' எனும் பூச்சியினங்கள் தங்கள் கூடு கட்டுவதற்கு உற்பத்தி செய்யும் ஒருவிதப் பிசினே 'அரக்கு'. இந்த அரக்குகளிலேயே சிறந்தது லாக்கிபர் லாகா என்பது. இந்தப் பூச்சிகளை, பலாசம், குசமம், இலந்தை, கருவேலமரம், காகக் கட்டி, அத்தி முதலிய இந்தியத் தாவரங்களில் பாலை உண்டு வாழ்கின்றன. கிராமஃபோன் தட்டுகள், முத்திரையிட ஸீல்கள், மேஜை, நாற்காலிகளுக்குப் பாலிஷ் மற்றும் பூட் பாலிஷ் போன்றவற்றினை அரக்கின் உதவியுடன் தான் செய்கின்றனர்.

—புதுவை நித்திலன்.

**தலை கீழாக**

எதற்காக இப்படித் தலைகீழாகக் கயிறுகட்டி இவரை இறக்குகிறார்கள்? கடந்த மே, ஜூன் மாதங்களில் ஜெருஸலம் நகரில் இஸ்ரேயல் விழா நடைபெற்றது. இதையொட்டி இரவெல்லாம் இசை, நடனம், கலை நிகழ்ச்சிகள் நடந்தன. அந்நிகழ்ச்சிகளில் ஒன்றே இப்படத்தில் நாம் காண்கிற விசித்திரம்! ஜப்பானைச் சேர்ந்த 'சங்கய் ஜூகு' நடன குழுவினர் ஜெருஸலம் நகரின் பழங் கோட்டைச் சுவர்களின் உச்சியிலிருந்து தலை கீழாக இறங்கிவந்துநடனமாடினர்! இஸ்ரேயல் நியூஸ் ஃபிரம் இஸ்ரேயல் என்ற சஞ்சிகையில் வெளியாகியுள்ளது இந்தப் படமும் செய்தியும்.

எதைத்தான் கலை என்பது என்பதற்கு ஒரு வரைமுறையே இல்லாமல் போய் விட்டது போங்கள்!

—எஸ்ஸார்.





ஓட்டல் முதலாளி: டேய் பையா! ஓடிப்போயத் தெரு முனையில் இருக்கற பிள்ளையார் கோயிலிலிருந்து நாலு தேங்காய்க் குடுமி பொறுக்கிட்டு வா!

பையன்: கரி அடுப்பு பற்ற வைக்கவ்களா?

ஓட்டல் முதலாளி: இல்லேடா! புண்ணாக்குச் சட்னியில் அப்பப்ப நாலு தேங்காய் நாரப் போட்டு வெச்சால்தான் வர்ற வங்க தேங்காய்ச் சட்னின்னு திருப்தியா சாப்பிடுவாங்க.

—கே. ஆர். எம்.

# தேநீரும் விருந்தோம்பலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்

உங்கள் இல்லத்திற்கு வருகை தரும்
நண்பருக்கு முதலில் வழங்குவது எது ?
நல்வரவு என்று சொல்லும் புன்னகையும்
நல்லதொரு கோப்பை தேநீரும் தானே !
அது வழி வழியாய் வரும் உங்களுடைய
கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில்
காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள்
இருந்தால் ? உடன் புதிய பால் கிட்டாத
நிலையானலோ ?

ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள்
பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண
உதவுகிறது. சிக்கனமாக, விரைவாக,
எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்கு
களுக்கும் இது ஈடு இணையற்றது..

# ஸாகர்

## ஸ்கிம் மில்க் பவுடர்

கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான
குணங்கள் உண்டே இதில்.




ASP/SMP/5/84



விற்பனைக்கு விடுபவோர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங்
பெடரேஷன் லிமிடெட், தபால்பெட்டி எண் 10,
ஆனந்த் 388 001, குஜராத்.

# மத்யத்துக்கு மேல் சக்களத்தி

—இலுப்பைத் தோப்பு — கிராம மென்றோ, டவுனென்றோ இனம் பிரிக்க முடியாத ரெண்டும் கெட்டான் ஊராய்த் தெரிந்தது. மக்களும் அப்படி. நாகரீகத்துக்கும் இவர்களுக்கும் இரண்டு மைல் தொலேவிருக்கும். இந்த ரெண்டும் கெட்ட மண்ணே நான் மிதிப்பது இதுவே முதல் தடவை.

—தூரத்து உறவினர் ஒருவரின் ஆத்மா உடற்கூட்டைக் காலி செய்துவிட்டுப் புதுக் கூட்டை வாடகைக்குத் தேடிப் போய்விட, இவர் மரணித்தார். சேதம் கேட்க உறவுகளுக்குத் தந்தி மூலம் அழைப்பு வந்தது.

—எங்களில் ஒரு பழக்கம். கல்யாண விசேஷமோ, கருமாதியோ — மணமான ஒருவன் எந்த நிகழ்ச்சியிலும் பங்கு பெறுவதெனில் அவன் மனேவியின் கூட்டுப் பிரசன்னம் இன்றியமையாத ஒன்று... என் மனேவி சுமதியோடும், எங்களின் இரண்டு வருடத் தாம்பத்யத்துக்கு அச்சாரமான ஆறுமாத வாரிசோடும் நான் இலுப்பைத்தோப்புக்குக் கிளம்பியே ஆக வேண்டுமென்று அம்மா அடம் பிடிக்கவே, வேறுவழியின்றிக் கிளம்பி வந்தோம்.

—ஒப்பாரிச் சத்தமும், தாரை — தப்பட்டைகளின் சோகமான எக்காளச் சத்தமும் எனக்கு அலர்ஜியான விஷயங்கள். அவற்றை என் மனம் ஜீரணிப்பது துர்லபம். குழந்தையை என்னிடம் ஒப்படைத்த சுமதி ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்த பெண்களுக்குத் தோள் கொடுக்கச் சென்று செயற்கையாய் அழ ஆரம்பித்து விட்டாள். குழந்தை புழுக்கம் தாங்காது இயற்கையாய் அழ ஆரம்பித்தான். அந்த வீட்டை விட்டு வெளியேறிப் பக்கத்துக் குடிசைப் பக்கம் காற்றாட வந்தேன். அப்போதும் அவன் அழுகை நின்றபாடில்லே!

—''ஏனுங்க குழந்தை இந்தக் கத்து கத்தறுன்... பசியிலயா...?'' என்றாள் பக்கத்து 'எஸ்கிமோ' குடிசை வாசலில் நின்றிருந்த பெண்ணெருத்தி.

—''பசியாவது, ஒண்ணுவதுங்க... இப்பத்தான் ஒரு பாட்டில் பாலேக் காலி பண்ணினுன்!'' என்ற நான் அவளே ஏறிட்டு நோக்கினேன். முப்பத்தைந்து வயதிருக்கும். கழுத்தில் கிடந்த அழுக்கேறிப் போன மஞ்சள் கயிற்றைத் தவிர வேறு ஆபரணங்கள் இல்லே. 'இளமை' இன்னும் எனக்குச் சொந்தமென்கிற மதர்ப்பான உடம்பு.

—''குழந்தையை இந்தக் கயத்துக் கட்டில்ல படுக்கவச்சித் தட்டிக் கொடுங்களேன்... அப்பவாவது தூங்குறுனு பார்ப்பம்!'' என்று குடிசைவாசலில் கிடந்த கட்டிலேக் காட்டினுள்.

—''அதாம்மா இந்த வீம்புக்காரப்பய மவன்கிட்ட நடக்காது... தொட்டிலில படுத்தாத்தான் தூங்குவான்... இல்லாட்டி கத்தியே நாறடிச்சிடுவான்.''

—''அப்படியாச் சேதி?... புள்ளேயோட அம்மா வந்திருக்குதுல்ல?''

—''ம், வந்திருக்கா... உன்னே ஒப்பாரி வைக்கப் போய்ட்டா... இவன் இங்க ஒப்பாரி வைக்கறுன்!''



—சட்டென அவள், ''பச்சைப் புள்ளைய நாக் கூசாம அப்படிச் சொல்லாதிங்க!'' என்றுவிட்டு என்னைக் கோபமாய்ப் பார்த்தாள், நீண்ட நாள் பழக்கம்போல.

—அவள் பார்வையைத் தவிர்த்த நான் சட்டியில் சென்றமர்ந்து மகனைப் படுக்க வைத்துத் தட்டிக் கொடுத்துப் பார்த்தேன். அழுதான். தூக்கித் தோளில் போட்டுத் தட்டிக் கொடுத்தேன். தொடர்ந்தான். எனக்கு எரிச்சலாயிற்று.

—''செத்த நாழி இருங்க வர்றேன்'' என்று குடிசைக்குள் நுழைந்த அவள், மேலே எதையோ பார்வையால் தேடினாள். குடிசை உச்சியில் குறுக்கே ஓடிய மூங்கிலில் தொங்கிய தூளியில் ஏற்கெனவே ஒரு குழந்தை தூங்கிக் கொண்டிருந்தது. சட்டென்று அந்தக் குழந்தையை இறக்கிக் கோரைபோன ஒரு பழைய தடுக்கில் படுக்கவைத்துவிட்டு வெளியே வந்தாள்.

—''குழந்தையை இப்படிக் கொடுங்கய்யா... தூளியில் போட்டு நான் தூங்க வைக்கிறேன்!'' என்று வெகு சிரத்தையாய்க் கேட்டாள்.

—சத்தியமாய் இந்த வார்த்தைகள் நகரப் பெண்களிடத்தில் கேட்க முடியாதவை. சிலிர்த்துப் போன நான், ''உங்களுக்கு எதுக்கும்மா வீண் சிரமம்?'' என்றேன்.

—''நல்லாச் சொன்னீங்க... பிரேதத்தை எடுக்கக் கொறைஞ்சது இன்னும் ஒரு மணி நேரத்துக்கு மேல ஆவும்... அதுவரைக்கும்



இப்படியேவா உட்கார்ந்திருப்பீங்க... அதுக்குள்ள அழுதழுது புள்ளைக்கு வயிறு வீங்கிடும்!'' என்றவள் குழந்தையை என்னிடமிருந்து பறித்துச் சென்று தூளியில் படுக்க வைத்து லாகவமாய் ஆட்டினாள் - ''நல்ல பிள்ளையில்ல... அழாதடா கண்ணு... என் செல்லம்!'' — என்று ஆரோகணித்தாள்.

—முன்பின் தெரியாத வேறொருத்தி சுமந்து பெற்ற பிள்ளையை எந்தப் பெண்ணாவது இத்தனை சிரத்தையுடன் கவனிப்பாளா?

—அடுத்த விநாடி அந்தச் சிறு குடிசையைப் பார்வைக்குத் தீனியாக்கினேன்...

—அவர்கள் சலவைத் தொழில் செய்பவர்களாய் இருக்க வேண்டும். ஒரு மூலையில் அடுப்புக்கரிக் குவியல். இன்னொரு மூலையில் அழுக்குத் துணிக்குவியல். கொஞ்சம் பரப்பிக் கிடந்த கரிக்குப் பக்கத்தில் 'கரிச் சாப்பாட்டுக்காக' அயர்ன் பாக்ஸ் அண்ணாந்து வாய் பிளந்திருந்தது. மொத்தத்தில் அந்தக் குடிசையில் கால் ஊன்ற வெற்றிடம் கொஞ்சம் தானிருந்தது.

—அவளின் தாலாட்டில் குழந்தை ஐந்து நிமிடத்தில் அடங்கி உறங்கிப் போனான். பின் அவள் அடுக்களைக்குள் நுழைந்தாள். பம்பரமாய்ச் சுழன்று முகம் கோணாமல் வேலையில் ஈடுபட்ட அவளின் நடவடிக்கை என்னை வெகுவாய்க் கவர்ந்தது. என்னவள் இவளுக்கு நேரெதிர்!

• • • •

மதியம் மணி பன்னிரண்டானபோது அவள் மீண்டும் குடிசை வாசலுக்கு வந்தாள். உழைத்த களைப்பு சிறிதும் அவள் முகத்தில் இல்லை. நான் கட்டிலில் கிடந்த தினசரியை எடுத்துப் பிரித்தேன். எழுத்துக்களில் கண்கள் லயிக்கவில்லை. அடிக்கொரு தரம் அவள் மேல் பாய்ந்தது.

—பிணம் இன்னும் தூக்கிய பாடில்லை. சென்னையிலிருந்து அவர் மகன் வரவேண்டுமாம். இடையில் ஒரு முறை சுமதி வந்து, ''குழந்தை அழுதிருனா?'' என்று கேட்டாள். அவன் குடிசைக்குள் தூளியில் தூங்குவதைப் பார்த்ததும் திகைத்தாள். விழிகளில் சந்தேகத்தைத் தேக்கித் திரும்பிப் போனாள். வீட்டுக்குப் போனதும் இதற்குத் தனியே 'என்கொயரி கமிஷன்' உண்டு!

—''ஐயா, பிரேதத்தை எடுக்க இன்னும் நேரமாகும் போலிருக்கே?'' என்று அவள் என் கவனத்தைக் கலைத்தாள். அவள் ஏதோ வேலை நிமித்தமாய் எங்கோ போக வேண்டும் போல் எனக்குத் தோன்றியது.

—''ஏம்மா, நீங்க எங்காவது வெளியில் போகணுமா... நான் வேணாக் குழந்தையைத் தூக்கிக்கறேனே?'' என்றேன்.

—''வேண்டாங்கய்யா, புள்ள தூளியிலேயே தூங்கட்டும்... சொகமான நித்திரையை ஏன் கலைக்கணும்... நீங்க எழும்பறப்போ பிள்ளையைத் தூக்கிக்கிட்டுக் கதவை ஒருக்களிச்சி வச்சிட்டுப் போயிடுங்க!'' என்றுவிட்டு நகர யத்தனித்தாள்.

—''ஏம்மா, விடுல வேற யாரும் இல்லை போலிருக்கே... நீங்களும் வெளியே போயிட்டா உள்ளே தூங்கிக்கிட்டிருக்கிற குழந்தையையும் வீட்டையும் மற்ற வேலைகளை யார் கவனிச்சிக்குவாங்க?'' என்று யதார்த்தமாய்க் கேட்டேன்.

—''மற்ற வேலைகளைக் கவனிச்சுக்க என் சக்களத்தி வருவா!'' என்று சர்வ சாதாரணமாய்ச் சொல்லிவிட்டு அவள் நடையைக் கட்டினாள்.

—அந்தப் பதிலில் அதிர்ந்து போனவனாய் நடந்து சென்ற அவளையே பார்த்திருந்தேன். என் மனத்தில் ஏகப்பட்ட கேள்விகள் எழுந்தன.

—'எவ்வளவு பெரிய விஷயத்தை எத்தனை சாதாரணமாகச் சொல்லிவிட்டாள்!' உள்ளே உறங்கும் குழந்தை யாருக்குப் பிறந்ததாயிருக்கும்?'

—'மனத்துக்குள் இத்தனை பெரிய கவலையை வைத்துக் கொண்டு வீட்டு வேலைகளில் இயல்பாய் எப்படி இவளால் ஈடுபட முடிந்தது... நிச்சயமாய் இவள் ஒரு வித்தியாசமான கேரக்டர்!'

—'வீட்டு வேலையிலும் 'ஷிஃப்ட்' முறையா... மதியம் வரை ஒருத்தி... மதியத்துக்கு மேல் சக்களத்தி!' — இவர்களை வழி நடத்தும் அந்தக் கணவனைப் பார்க்க என் மனம் துடித்தது.

—சூழ்நிலைகளை மறந்துவிட்டுச் சிந்தனையில் ஆழ்ந்து போனேன்.

—எது எப்படியோ...? எனது எழுத்தாள மனத்துக்கு ஒரு கதைக்கரு கிடைத்து விட்டது!



குழந்தைகளைப் பெற்றோர்களைத் தவிர மற்றவர்கள் முத்தமிடுவது யூகோஸ்லாவியாவில் சட்டப்படி குற்றம். சண்டவர்கள் எல்லாம் குழந்தைகளை முத்தமிடுவதால் குழந்தைகளுக்குத் தொற்றுநோய் வருகிறது. ஆகையால் மற்றவர்கள் குழந்தைகளை முத்தமிட வேண்டுமென்றால், குழந்தைகளின் பெற்றோர்களிடம் அனுமதி பெற்றே முத்தமிட வேண்டும். பெற்றோர்கள் கூடக் குழந்தைகளை அடிக்கடி முத்தமிடுவது நல்லதல்ல.

—கே. ஜி. எஃப் பழனிச்சாமி.

அவ்வப்போது தம்பிதுரையை உற்சாகப்படுத்தி மேலும், மேலும் படிக்க வைத்தவர் எம். ஜி. ஆர். தான். அதுமட்டுமல்லாமல் தம்பிதுரை வெளிநாடுகளில் பல கருத்தரங்கங்களிலும், மாணவர் மாநாடுகளிலும் கலந்து கொள்வதற்குப் பேருதவி செய்திருக்கிறார் எம். ஜி. ஆர்.

நாடாளுமன்றத் துணைத் தலைவர் பதவியைப் பிரதமர் ராஜீவ் அ. தி. மு. க. வுக்குக் கொடுத்த பிறகு, அந்தப் பதவியை அடையப் போகும் அ. தி. மு. க. எம். பி. 'அவர்தான்.' 'இவர்தான்' என்று பல பெயர்கள் அடிபட்டுக் கொண்டிருந்தபோது, அமெரிக்காவிலிருந்து எம். ஜி. ஆர். அவர்களின் தேர்வைத் தெரிந்து கொண்டு வந்தார் நெடுஞ்செழியன். அவர் தர்மபுரி நாடாளுமன்றத் தொகுதி உறுப்பினர் **எம். தம்பிதுரை** என்று அறிந்ததும் பலரது புருவங்கள் உயர்ந்தன, 'முற்றிலும் புதிய நபராக இருக்கிறாரே!' என்று. ஆனால் தம்பிதுரை எம். ஜி. ஆருக்குப் புதியவரல்ல. 1972—ல் இருந்தே எம். ஜி. ஆர். அவர்களுடன் தொடர்பு கொண்டிருப்பவர்.

தர்மபுரி மாவட்டத்திலுள்ள செந்தகம் பள்ளி என்ற கிராமத்தில் பிறந்த தம்பிதுரை உயர்நிலைப் பள்ளி வரை கிருஷ்ணகிரியில் தான் படித்தார். குடும்பம் திராவிட இயக்கத்துடன் தொடர்புடையது. உயர் நிலைப்பள்ளியில் படிக்கும் போதே அண்ணா, கலைஞர், நாவலர், போன்றவர்களின் மேடைப் பேச்சில் கவரப்பட்டு, பிற்காலத்தில் அரசியலில் இறங்கி, சேவை செய்ய வேண்டுமென்ற எண்ணத்தைச் சேர்த்து வைத்திருந்தார் தம்பித்துரை. திருநெல்வேலியில் பி. யு. ஸி. வாணியம்பாடி இஸ்லாமியா கல்லூரியில் பட்டப்படிப்பு.

டெல்லியில் இருந்து சென்னை வந்த முதல்நாள் படு பிஸியாக இருந்தார் துணை சபாநாயகர். ஆனாலும் அன்று இரவு பன்னிரண்டு மணிக்குச் சந்தித்த போது 'ஃப்ரெஷ்'ஷாக இருந்தார்.

''இதற்குமுன்னால் நாடாளுமன்றத்துக்குப் பார்வையாளராகவாவது சென்றிருக்கிறீர்களா?''

''பல முறை டெல்லி சென்றிருந்தாலும் பாராளுமன்றக் கட்டிடத்துக்குள்ளேயே நுழைந்தது கிடையாது!''

தம்பிதுரையின் குடும்பம் மிகவும் ஏழ்மையானது. கிறிஸ்தவக் கல்லூரியில் எம். ஏ. பட்டத்துக்குப் படிக்கும்போது ஹாஸ்டல் கட்டணம், கூடக் கட்ட வசதியில்லாமல் படிப்பை விட்டு விடலாமா என்று யோசித்திருக்கிறார். நல்ல வேளையாக அவரது மாமா ஒருவர் உதவி செய்ததால் படிப்பு தொடர்ந்தது. பொருளாதாரத்தில் எம். ஏ. பெற்றார். இப்போது பின்தங்கிய மாவட்டங்களைப் பற்றிய 'தீஸிஸ்' ஒன்றைப் பல்கலைக் கழகத்தில் சமர்ப்பித்துவிட்டு 'டாக்டர்' பட்டத்திற்காகக் காத்திருக்கிறார்.

இவரது 'பயோ டேடா'வைப்பார்த்துவிட்டு, ராஜீவ் இவரை வரவேற்ற போது ''வாருங்கள், மெத்தப் படித்த பேராசிரியர் அவர்களே!'' என்றார்.

36 வயதான தம்பிதுரை இன்னும் திருமணம் செய்து கொள்ளவில்லை.

''வாழ்க்கை இதுவரை படிப்பு, படிப்பு, பொதுநலச் சேவை என்றே கழிந்து விட்டது. இன்னும் படித்து, பல்வேறு விஷயங்களைத் தெரிந்து கொள்ளவே விரும்புகிறேன். படிப்புச் செலவுக்கே கஷ்டப்பட்டுக் கொண்டிருந்ததால்தான் கல்யாணம் செய்து கொள்ளவில்லை.''

தர்மபுரி தொகுதியில் கம்யூனிஸ்ட் தலைவர் பார்வதி கிருஷ்ணனைத் தோற்கடித்தது சக எம். பிக்களிடம் நன் மதிப்புப் பெறப் பெரிதும் உதவுகிறதாம். உறுப்பினர்கள் பலர் 'ஓ இந்த இளைஞரா, அந்த கம்யூனிஸ்ட் தலைவரைத் தோற்கடித்தார்' என்று வியக்கின்றார்களாம்.

''துணைச் சபாநாயகர் அனுபவம் எப்படியிருக்கிறது?''

''நாடாளுமன்றத்தைப் பொறுத்தவரை சபாநாயகர், அவையில் ஒரு மணி நேரம் (அதுவும் கேள்வி நேரம்) தான் இருப்பார். மற்றபடி நிர்வாக அலுவல்கள் அவருக்கு அதிகம். ஆகையால் பெரும்பாலான சமயங்களில் துணைச் சபாநாயகர் தான் அவைக்குத் தலைமையேற்க வேண்டும். இதுவரை மூன்று நாட்கள் நான் தலைமையேற்றிருக்கிறேன். ஐந்து மசோதாக்கள் நிறைவேறியிருக்கின்றன.''

# பலராமனுக்குத் தம்பி; பாராளுமன்றத்துக்குத் துரை!



**சந்திப்பு: தம்பிதுரை**

1980 தேர்தலிலேயே கிருஷ்ணகிரி தொகுதியில் போட்டியிடுவதாக இருந்த தாம். ஆனால் எம். ஜி. ஆர் அவர்கள், ''சற்றுப் பொறு; தக்க சமயத்தில் உன்னைப் பயன்படுத்திக் கொள்கிறேன்'' என்று சொல்லி வைத்திருந்தாராம். அண்ணா பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக இருந்த அனுபவமும் தம்பிதுரைக்கு உண்டு.

1965-க்கு முன்னர் தனியாக இந்தி படித்து 'ராஷ்ட்ர பாஷா' என்ற பரீட்சை வரை பாஸ் செய்த தம்பிதுரை, ப்ரவீன் பரீட்சைக்கு ஹால் டிக்கெட் வந்தபோது கிழித்தெறிந்து விட்டு இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொள்ளச் சென்றவர்.

சிறிய வயதிலிருந்தே எம். ஜி. ஆர். படங்களை விரும்பிப் பார்ப்பார். பிடித்த படம் 'திருடாதே'. பிடித்த உலகத் தலைவர் ஆபிரகாம் லிங்கன். உலகில் முக்கால் பகுதியைச் சுற்றிய இவருக்குப் பிடித்த நாடு மே. ஜெர்மனி ('மக்கள் கடுமையான உழைப்பாளிகள்!').

மணி இரவு ஒன்றை நெருங்கிவிட பாதுகாப்பாளர் வந்து காலை ஐந்து மணிக்குத் திருவேற்காடு கோவிலுக்குப் போக வேண்டியதை ஞாபகப்படுத்தினர்.

'குட் நைட்' சொல்லிவிட்டுக் கிளம்ப இருந்த என்னிடம் ''பரவாயில்லை பேசலாம்'' என்றார் தம்பிதுரை. 'நீங்கள் படுக்கப் போங்கள்' என்று கூறிவிட்டு வெளியில் வந்தேன்.

—ப்ரியன்

படம்: சுபா



## முற்றுகைக்குள்ளான அக்பர்

இளமையான பத்திரிகை ஆசிரியர் என்ற பட்டத்துக்கு முற்றிலும் பொருத்தமானவர் எம்.ஜே. அக்பர், 'சண்டே', ''டெலிகிராஃப்' ஆங்கில இதழ்களின் ஆசிரியர். சென்னைக்கு வந்திருந்த போது, தமது சமீபத்திய புத்தகத்தைப் பற்றிப் பேசினார். ''இந்தியாவுக்குள் ஒரு முற்றுகை'' எழுதிய அவர் இளைஞர்களின் முற்றுகைக்கு உள்ளானார்.

ஒரு தேசிய முஸ்லிமின் பெருமிதம் அக்பரின் பேச்சில் இழையோடியது. ஹிந்துக்களின் சகிப்புத்தன்மைதான் இந்திய மதச் சார்பின்மையின் வெற்றிக்குக் காரணம் என்றார்.

இத்தனை இளம் வயதில் (34 வயது) ஓர் இந்தியரின் நூல் பெங்குவின் புத்தகமாக வெளியிடப்பட்டது இதுவே முதல் தடவை. கேட்டார் ஓர் இளம் பெண்மணி: ''ஏன் பெங்குவினுக்குக் (அயல்நாட்டு நிறுவனம்) கொடுத்தீர்கள்? ஒய் நாட் விகாஸ்?'' ''இந்த ராயல்டி தொகை யார் கொடுப்பார்கள் அம்மணி?'' என்றார் அக்பர் ஒளிவு மறைவின்றி.

13000 பிரதிகள் இந்தியாவுக்கு வந்தனவாம். பாதிக்கு மேல் இப்போதே விற்றுத் தீர்ந்துவிட்டன. பாகிஸ்தான் பிரிவினை, காஷ்மீர், பஞ்சாப் பிரச்னைகள், இந்திரா மரணத்துக்குப்பின் வரையிலான சமீபத்திய நிகழ்ச்சிகள் உட்பட சுவாரசியமாக எழுதப்பட்ட 325 பக்கப் புத்தகம் *India—The siege within.* முக்கியமான பகுதி: பிந்தரன்வாலே சந்திப்பு!

-எஸ்வி

பேச்சாளர்: ''இந்த மைக் ஏன் இப்படித் தகராறு பண்ணுது?''

கூட்டத்தில் ஒருவர்: ''அதுக்கு மில்லிவாடைன்னு அலர்ஜி போலிருக்கு...!''

—அ. தெய்வசிகாமணி.



# இதய மாற்றத்துக்கு இடம் கொடுங்கள்!



**எதிர்க்கட்சிகளின் எதிர்காலம் பற்றிக் கருத்து அறிய திரு. சுப்பிரமணியன் சுவாமி அவர்களுக்குச் சில கேள்விகளைக் கடிதத்தில் எழுப்பியிருந்தோம்.**

அன்புள்ள ஆசிரியருக்கு:

தங்கள் கடிதத்தில் எழுப்பப்பட்டுள்ள சில கேள்விகளுக்கு எனது பதில்கள்:

சமீபத்திய தேர்தலில் எனது தோல்விக்கு உண்மையான காரணம் என்ன என்று கண்டறிவது கடினமாக இருக்கிறது. கடந்த ஐந்து வருடங்களாக எனது தொகுதியில் நான் ஆற்றிய பணிகள் பெரிதும் வரவேற்கப்பட்டு எனக்குப் புகழும் பெற்றுத் தந்தது. தவிரவும் தொகுதிக்கு அடிக்கடி விஜயம் செய்து கொண்டுதான் இருந்தேன். எம். பியாக இருந்த போது நான் செய்தவற்றை மக்கள் அறவே எண்ணிப் பார்க்கவில்லை என்பது தெளிவாகிறது.

எனது தோல்விக்குக் காரணமாக இருந்திருக்கக் கூடிய இரண்டு விஷயங்கள்: 1. பெண் வாக்காளர்கள் அனுதாபம் காரணமாக இந்திரா காங்கிரஸின் புறம் அணி சேர்ந்தனர். 2. பி. ஜே. பி. சில லோக்கல் கூட்டணி ஊழியர்கள் எனது வழக்கமான ஆதரவாளர்களான தமிழர்களையும், சீக்கியர்களையும், குஜராத்திகளையும் வன்முறை கட்டவிழ்த்து விடப்படும் என்பதாக அச்சுறுத்தியதால் இவர்கள் கடைசி நிமிடத்தில் பாதுகாப்புக்காக இந்திரா காங்கிரஸ் பக்கம் சரிந்து விட்டார்கள்.

வேட்பாளரின் தனிப்பட்ட — தகுதி — தராதரத்துக்கு ஒரு மதிப்பே இல்லை என்பதை இந்தத் தேர்தல் தெளிவாகக் காட்டியிருக்கிறது. மக்கள் இப்போதெல்லாம் கட்சிக்காகத்தான் வாக்களிக்கிறார்கள் — அதுவும் உணர்ச்சி வசப்பட்டுப் போய்முடிவெடுக்கிறார்கள். மக்கள்தங்கள்அறிவைப் பயன்படுத்தி வாக்களிப்பதில்லை. இதயத்தைப் பின்பற்றிச் செயல்படுகிறார்கள்!

இன்னும் ஆறு மாதங்கள் கழித்தே நான் மீண்டும் தீவிரமாக அரசியலில் இறங்குவதாக இருக்கிறேன். இப்போதைக்குப் படிப்பதிலும், தற்காலிகமாக நிறுத்தி வைத்திருந்த பொருளாதார ஆய்வுகளைத்தொடர்வதிலும், ஈடுபட விரும்புகிறேன். இந்தக் கோடையில் (ஜூலை — ஆகஸ்ட்.) அமெரிக்காவில் ஹார்வார்ட் பல்கலைக்கழகத்தில் போதிக்கப் போகிறேன்.

1985—86—ல் இலங்கைப் பிரச்னையிலும் பஞ்சாப் பிரச்னையிலும் விசேஷ கவனம் செலுத்தத் தீர்மானித்துள்ளேன்.

எதிர்க்கட்சிகள் அடுத்து செய்ய வேண்டியது: நேர்மையான இளைஞர்கள் பலரைத் தேர்ந்தெடுத்து, ஒரு குழு அமைத்து, திட்டம் ஒன்றை வகுத்துக் கொண்டு, அடுத்த ஐந்து ஆண்டுகளில் மக்களின் முக்கிய பிரச்சினைகளை தீர்க்க ஆக்கபூர்வமான முறைகளை மேற்கொள்ள வேண்டும்.

ஆந்திராவில் தெலுங்கு தேசம் கிளர்ந்தெழுந்தது போல் எதிர்க்கட்சிகள் ஒன்றுபட்டுத் திரண்டெழலாம் — ஒரு குறிப்பிட்ட காரணத்துக்காக, குறிக்கோளுக்காக. இயந்திர கதியில் கட்சிகளை இணைப்பது அவசியமில்லை. அது நடக்கவும் செய்யாது. சந்திரசேகர் வாஜ்பாயி போன்றோர் தங்கள் கட்சியின் தலைமைப் பொறுப்பிலிருந்து இறங்கிவர இணங்காதது பதவி ஆசை கொண்டுள்ளவர்கள் மூத்த தலைவர்கள் மட்டுமல்ல என்பதை நிரூபித்துள்ளது.

பத்திரிகைகள் மற்றும் பிற பொதுஜனத் தொடர்புத் துறைகள், எதிர்க்கட்சிகள் தற்காலிகமாக ஏற்படுத்தியுள்ள சூன்யத்தை இட்டு நிரப்பும் வகையில் இன்றைய முக்கிய பிரச்சினைகளை மக்கள் கவனத்துக்குக் கொண்டு வர வேண்டும். மேம்போக்கான விமர்சனங்களைத் தவிர்த்து, குறிப்பிட்ட பிரச்னைகளில் எந்த எதிர்க்கட்சித் தலைவர்கள் சத்தான கருத்துக்களைக் கூறுகிறார்களோ, அவர்களுக்கும் அவர்களது சொல்லுக்கும் முக்கியத்துவம் தந்து மக்கள் கவனத்தை ஈர்க்க வேண்டும்.

புதுதில்லி—1. **சுப்பிரமணியன் சுவாமி**

(தமிழாக்கம்: எஸ்ஸார்)

## எதிர்க்கட்சிகளின் எதிர்காலம்

# கமல் பதில்கள்



**47. எஸ். பி. அழகு, பிலிக்கல்பாளையம்.**
**திரு. பாலசந்தரின் திறமை அவருடைய கதையிலா, வசனத்திலா, டைரக்ஷனிலா?**

இதுக்கு அழகான பதிலை விட, உண்மையான பதிலைச் சொல்வது தான் நல்லா இருக்கும். அவருடைய படத்தில வரும் டைட்டில் கார்டுல பார்த்தீங்கன்னு, திரைக்கதை — வசனம் — டைரக்ஷன்னு போட்டிருக்கும். இந்த மூன்றும் சேர்ந்ததுனலதான் அவருக்குக் கிடைத்தன வெற்றியும், பெயரும், புகழும். ஒன்றிலல்லாது மூன்றிலுமே சிறந்தவர் அவர். சிறந்தவர் இல்லேன்னுக் கூடச் சிறந்தவர் தான் என்று சொல்லும் ஒரு மகனின் ஸ்தானம் எனக்கு. ஆனால், நல்லவேளையாக நான் அப்படி உண்மைக்குப் புறம்பாகப் பேச வேண்டிய அவசியமே இல்லை. என் அதிர்ஷ்டம், என்னுடைய கலையுலகத் தகப்பனார் மூன்றிலுமே சிறந்தவர் என்று சொல்லும் பெருமிதத்தை எனக்குத் தந்திருக்கிறார். மகனைப் பார்த்துச் சொல்லுவாங்க இல்லே, இவன் தந்தை என்னோற்றான் கொல் எனும் சொல் என்று? எனக்கு வந்து நிவர்ஸ்ல, மகன் என்னோற்றான் கொல் என்கிற மாதிரி, ஒரு பெருமைக்குரிய திரையுலகத் தகப்பனார் கிடைத்திருக்கிறார்.

**48. பி. ஆனந்தகுமார், சேலம்.**
**நிறைய படிக்க வேற தொழிலுக்குச் செல்லாமல், ஏண்டாப்பா இந்த சினிமாத் தொழிலுக்கு வந்தோம் என்று எப்போதாவது நினைத்ததுண்டா?**

எப்போதும் நினைத்தது கிடையாது. காரணம், படிக்கும்போதும் சரி, இப்போது நடிக்கும்போதும் சரி, என்னோட நினைவு பூரா இந்தக் கலையுலகத்துலதான். கலையுலகம்னு வெறும் சினிமாவை மட்டும் சொல்லலே. ஏதாவது ஒரு கலைத்துறையிலேதான் இருப்பேன்னு ஒரு வீம்பு ஆரம்பத்திலிருந்து எனக்கிருந்தது. என் படிப்பைக் கூட நிறுத்திட்டேன். ஒன்பதாம் கிளாஸ் வரைதான் படிப்பு. அதுவும் கூட ஏதோ ஒரு அதிர்ஷ்டத்துலதான் ஒன்பதாம் கிளாஸ்ல பாஸ் பண்ணியிருக்கேன் நான். மற்றபடி ஒரு நிமிஷம் கூட, இந்தத் தொழிலுக்கு வந்திருக்க வேணாம்னு நினைச்சது கிடையாது. என்னோட *Profession and Passion fortunately coincided*. அதனால தான் நான் விடுமுறை கிடைக்கிறபோதுகூட வருடா வருடம் நடக்கிற பிலிம் பெஸ்டிவலுக்குத்தான் போவேன்! லீவு நாட்கள்ள என்ன செய்வேன்னு பலர் கேட்பாங்க. அதுலயும் நான் புஸ்தகங்கள் படிப்பேன். வீடியோ மேனியாக்குக்கு ஆட்பட்டு சினிமாக்களைப் பார்த்துக்கிட்டே இருப்பேன்.

**எஸ். வி. ரமணன்: நீங்கள் ஏன் டைரக்ட் செய்யவில்லை?**

இந்தக் கேள்வி வந்து, ஒரு பெண்ணைப் பார்த்து நீங்க ஏன் கர்ப்பமாகவில்லை என்று கேட்கிற மாதிரியான விஷயம். அதற்கு ஒரு கணவன் வேண்டும். அந்த மாதிரிப் பார்க்கும்போது, அதற்கு ஒரு தயாரிப்பாளர் வேண்டும் — என் திறமைமேல் நம்பிக்கை வைத்திருக்கும் தயாரிப்பாளர். அதாவது என் டைரக்ஷன்கற கற்பின் மேல் நம்பிக்கை உள்ளவர் வேணும். அவர் என்னைக் கல்யாணம் செய்து கொண்டு, என்னுடைய சினிமாக் குழந்தையைப்பெறும் அளவுக்கு எங்களுடைய உறவு வளர வேண்டும். அதற்கப்புறம் அந்தப் பிரசவ வேதனையைத் தாங்கிக்கொண்டு, அதிலேயே மாண்டுவிடாத ஒரு வைராக்கியம் எனக்கு வேண்டும். டைரக்டர் என்ற தாய் படும் வேதனையை நான் திரு. பாலசந்தர் அவர்கள் பக்கத்திலிருந்தும், பல வெற்றிகரமான டைரக்டர்கள் பக்கத்திலிருந்தும் பார்த்ததனால், ஒரு பயத்திலேயே ஒதுங்கி ஒதுங்கி— அதாவது, 'இடுப்பு வலிக்கும், நான் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்' என்று சொல்லும் கன்னிப் பெண் மாதிரி — நான் இந்த டைரக்ஷனைப் பார்த்து, 'ஐயையோ வேணும்... பிரசவ வேதனை என்னால தாங்க முடியாது!'ன்னு ஒதுங்கி ஒதுங்கி இருக்கேன்!

**49. ஸ்ரீமதி விஜயா ரங்கநாதன், டோம்பிவிலி மேற்கு தானா.**
**பல காரக்டர் ரோல்களில் நடிக்கும் நீங்கள், உங்கள் கார்க்டரைப் பற்றிக் கொஞ்சம் கூற முடியுமா?**

என்னைப் பொறுத்த வரையிலும் நான் கடுமையான விமர்சகன். ஆக, என்னுடைய காரக்டர் பற்றி விமர்சனம்தான் என்கிட்டேயிருந்து வரும். பாராட்டு மற்றவங்க சொல்லணும். என்னுடைய காரக்டர் பற்றிய விமர்சனம் ரேடியோவில் சொல்லும்படியாக இருக்காது. எனவே மன்னிக்க வேண்டும்.

**50. ஸ்ரீமதி ரம்யா, கோயமுத்தூர்.**
**தாய்க்குப் பின் தாரம் என்றவர்கள், தாரத்துக்குப் பின் யார் என்று சொல்லாமல் விட்டது ஏன்?**

இதெல்லாமா சொல்லிக்கிட்டிருப்பாங்க? இதெல்லாம் அவங்கவங்க முடிவு பண்ணிக்க வேண்டியதுதான். தாய்க்குப் பின் தாரம்னு சொல்லுவாங்க. அதுக்கப்புறம் தெம்பு இருக்கறவங்க, தைரியம் இருக்கறவங்க,

---

## நேரம் நல்ல நேரம்

---

ரெண்டாம் தாரம்னு சொல்லிக்கலாம்! இல்லே, யாருமே இல்லேன்னும் சொல்லிக்கலாம். இல்லே ரிட்டயர்மெண்ட்ன்னு சொல்லிக்கலாம்... இல்லே விவாகரத்துன்னு சொல்லிக்கலாம்... இதையெல்லாம் போய்க் கேட்டுக்கிட்டிருக்க முடியுமா? ரம்யமான கேள்விதான்; இதுக்குக் கொஞ்சம் கடுமையாகப் பதில் சொல்லிவிட்டேன். மன்னிக்கணும்.

51. இ. தமிழ்ப்பிரியன், அம்பத்தூர்.
தாங்கள் பிறந்தது தமிழ்நாட்டில். சிறு வயது முதல் தங்களை வளர்த்தது தமிழ்த் திரையுலகம். அப்படி இருக்க, தமிழ்த் திரையுலகையே மறந்து, வடக்கே நீங்கள் கலையை வளர்க்க முனைந்திருப்பது எந்த விதத்தில் நியாயம்?

அப்படிச் செய்திருப்பேனேயானால் அது நியாயமே கிடையாது. தமிழ்ப் பிரியன் என்று உங்கள் பெயர் இருக்கலாம். அந்தப் பெயர் எனக்கு இல்லை என்றாலும் அந்தப் பிரியம் எனக்கு இருக்கிறது. ஆக, நான் தமிழ்த் திரையுலகை மறந்துவிட்டேன் வடநாட்டுக்குச் சென்றுவிட்டேன் என்பது சரியான குற்றச்சாட்டு கிடையாது. ஏன் என்றால், நான் வடநாட்டையும் மறந்துவிட்டேன். ஒரு வருஷமாக என்னுடைய எந்தவிதமான படமும் ரிலீஸாகவில்லை. அதற்குப் பல சிக்கல்கள். அமிதாப் பச்சனின் உடல்நிலை உட்பட, பல காரணங்கள். புதுப்படங்களில் கையொப்பம் இட்டு வேலைப்பளுவை அதிகப்படுத்திக் கொள்ள விரும்பாததனால், 'பரவாயில்லை; இருக்கிற வேலையைச் செய்து கொண்டு இருந்து விடுவோம்' என்று ஒரு வருடம் இருந்து விட்டேன். வடநாட்டிலும் படம் ரிலீஸாகவில்லை; தமிழ்நாட்டிலும் படம் ரிலீஸாகவில்லை! ஒரு வருடம் பூரா ஓயாத வேலை மாத்திரம் இருந்தது. முடிக்க வேண்டிய படங்கள், முடிந்து கொண்டிருக்கும் படங்கள், ஆரம்பித்த படங்கள் என்று பட்டியல். நீங்கள் சொல்லுவதுபோல் தமிழ்நாட்டை உதாசீனப்படுத்திவிட்டேன் என்பதில் உண்மையே கிடையாது. அதற்கு உதாரணமாக — இப்போது வரப்போகும் ஐந்து படங்கள் — தேங்கிநின்ற படங்கள், வரிசையாக வரும். 'இவ்வளவு ஞாபகம் வைத்திருக்க வேண்டாம் தமிழ்நாட்டை' என்று கூட நீங்கள் குற்றச் சாட்டு சொல்லுவீர்கள்!

எஸ். வி. ரமணன்: ரசிகத் தன்மையில வடநாட்டுக்கும் தென்னாட்டுக்கும் உள்ள வித்தியாசத்தைச் சொல்ல முடியுமா?

இந்தக் கேள்வி — பக்தியில் தமிழ்நாடு சிறந்ததா, வடநாடு சிறந்ததான்னு கேக்கற மாதிரியான ஒரு விஷயம். அங்கேயும் கோயில் இருக்கிறது. அங்கேயும் காசி இருக்கிறது... இங்க திருப்பதி இருக்கிறது மாதிரி. ரசிகத்தனம் என்பது பக்தி மாதிரி பரவலான விஷயம். உலகம் முழுவதும் இருக்கும் விஷயம். அது தனி நபர்களின் அறிவு, மனவளர்ச்சி, பண்பாடு வளர்ச்சிக்கு ஏற்ப மாறலாமே தவிர, முந்நூறு மைலுக்கு ஒரு தடவை மாறுங்கறதெல்லாம் சரியில்லை.

52. ஏந்தல் இளங்கோ.
திடீரென்று, நீங்கள் பயணம் செய்யும் விமானம் கைதுறாக் செய்யப்பட்டால் உங்கள் மனநிலை என்னவாக இருக்கும்?

பதில்: அடுத்த வாரம்

தொகுப்பு: சித்தார்த்

⌘ ''பெருமைக்குரிய திரையுலக தகப்பனார்''



# உங்கள் முதலீட்டிற்கும்
# உங்கள் குடும்பத்திற்கும் பாதுகாப்பளிப்பது



## ULIP ஒன்றே!

யூனிட் லிங்க்ட் இன்சூரன்ஸ் ப்ளான் (ULIP) அளிக்கும் பயன்களை அறிந்து கொள்ளுங்கள்.

மருத்துவ சோதனையின்றி உங்களுக்கு ஆயுள் இன்சூரன்ஸ் பாதுகாப்பு உங்கள் இலக்குத் தொகைக்குச் சமமாக கிடைக்கிறது.

மேலும் ரூ. 15,000 வரை விபத்து இன்சூரன்ஸ் பாதுகாப்பும் இலவசமாகக் கிடைக்கிறது.

இவை தவிர; உங்கள் முதலீடு கணிசமான டிவிடெண்ட் பெறுகிறது.

நீங்கள் செலுத்தும் தொகைக்கு வருமானவரி சலுகைகளும் உண்டு!

நீங்கள் 18 முதல் 45½ வரை வயதுள்ளவராயிருப்பின் ULIP திட்டத்தில் சேரலாம். உங்கள் இலக்குத் தொகை குறைந்தபட்சம் ரூ. மூவாயிரமாகவும் அதிகபட்சம் ரூ. பன்னிரெண்டாயிரமாகவும் இருக்கலாம். பத்து வருடமோ அல்லது பதினைந்து வருடமோ நீங்கள் ULIP திட்டத்தில் முதலீடு செய்யலாம்.

முதல் ULIP திட்டத்தில் சேர்ந்து மூன்றுண்டுகளுக்குப் பின் நீங்கள் இலக்குத் தொகை ரூ. 12,000த்திற்கு மற்றுமொரு ULIP திட்டத்தில் சேரலாம்.



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)
தலைமை அலுவலகம்: பம்பாய் 400 020

பிராந்திய அலுவலகம்: ஜெமினி மான்ஷன், 46, செனட் ஹவுஸ் ரோடு, சென்னை 600001. போன்: 27433
ஆந்திரப்பிரதேச அலுவலகம்: 27/11/68, மேரி சாலை, கவர்னர்பேட்டை, விஜயவாடா-520002. போன்: 63964
கேரள அலுவலகம்: XII/758, தேக்கடம் சாலை, திருச்சூர் 680001. போன்: 24690

தமிழ்நாட்டில் உள்ள எங்கள் முக்கிய பிரதிநிதிகள்: • கோவை, பெரியார், நீலகிரி மாவட்டங்களுக்கு: திரு. எ. தனபால், 30, ஹுஸைன் ரோடு, கோவை 641018. போன்: 34776 (அலு) 43179 (வீடு) • மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களுக்கு: திரு. எம். இராமமூர்த்தி, 30, எல்.ஐ.சி. காலனி, மதுரை 625002. போன்: 30160 (அலு) • சேலம் மாவட்டத்திற்கு: திரு. என்.கே. இளங்கோ, 155, கன்னியம்மன் தெரு, அன்னதானப்பட்டி, சேலம் 636002. போன்: 64302 (வீடு) • தஞ்சை மாவட்டத்திற்கு: திரு. கே. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி. நகர், தஞ்சை 613007. போன்: 1224 (வீடு) • நெல்லை, குமரி மாவட்டங்களுக்கு: திரு. எம்.எம். காஜா, பக்காரி பில்டிங் அனெக்ஸ், 41-B, திருவனந்தபுரம் நெடுஞ்சாலை, பாளையங்கோட்டை 627002 போன்: 4520 (அலு) 5395 (வீடு) • திருச்சி மாவட்டத்திற்கு: திரு. எம். ராமலிங்கம் 21-A, கான்வெண்ட் ரோடு, திருச்சி 620001 போன்: 28280

**உங்கள் சேமிப்பின்**
**தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்**

**20 YEARS OF TRUSTED SERVICE**

Sista's-UTI.242.84 TM E

# மக்கள் கலைஞர்

கும்பகோணத்துக்கு அருகே ஒரு கிராமத்தில் அன்றைக்கு இசை நிகழ்ச்சி. மாட்டு வண்டியில்தான் போக வேண்டும்; பாதை அப்படி. இருந்தாலும் போகத் தயங்கவில்லை குன்னக்குடி. காரணம்? அங்கே அவரது இசையைக் கேட்கக் கூடியிருப்பவர்கள் எளிய, பாமர ஜனங்கள். பெரும்பாலும் நாள் முழுக்க வயலில் பாடுபடும் விவசாயிகள். இரவு பன்னிரண்டு மணி வரை வாசித்து விட்டு, மேடையிலிருந்து இறங்கியதும் அருகேயிருந்த சில விவசாயிகளை அழைத்து, ''எதற்கு இங்கே காத்துக் கொண்டு, உட்கார்ந்து இந்த இசையைக் கேட்கிறீர்கள்?'' என்று கேட்டார் குன்னக்குடி.

சிறிதும் தயக்கம் இல்லாமல் பதில் வந்தது அவர்களிடமிருந்து: ''கேட்க நல்லாயிருக்கு. கேட்கிறோம்''!

இதைப்பெருமையோடு சொல்லிக் கொண்டார் குன்னக் குடி.

கர்நாடகஇசையைக்குறிப்பிட்டஒரு பாணியில் கேட்டு ரசித்து வந்திருக்கும் சிலருக்கு குன்னக்குடியின் வாசிப்பு ஏற்க முடியாததாக இருக்கலாம். அந்த வேகமும் துடிப்பும் ஓசையும் ஆத்மானுபவம் அளிப்பதாக இல்லை என்றோ உணர்ச்சிகளைச் சமன்படுத்தி சாந்தி தரவில்லை என்றோ சிலர் கூறிக் கொண்டிருக்கலாம். ஆனால் இவர்களும் கூடக் குன்னக்குடியின் ஞானத்தையோ, ஆற்றலையோ குறைத்து மதிப்பிட மாட்டார்கள். அவரால் இப்படியும் வாசிக்க முடியும்; அப்படியும் வாசிக்க முடியும். ஒரு குறிக்கோளைத் தமக்கென்று நிர்ணயித்துக் கொண்டு அந்த வழியில் சென்றவர் அவர். அந்தக் குறிக்கோள் மிகப் பெரும்பான்மையான மக்களை கர்நாடக இசையைக் கேட்டு ரசிக்கச் செய்ய வேண்டும் என்பது தான்.

திரு குன்னக்குடி வைத்தியநாதன் அவர்களின் இசை ஒரு சிறிய வட்டத்துக்குள் சுழன்று வருவது அல்ல. அவர் எட்ட நினைப்பது — எட்டிப் பிடித்திருப்பது — ஒரு பெரிய ரசிகர் கூட்டம். கூரை போட்ட அடக்கமான சபா கூட்டமாக இருந்தாலும், ஆயிரக்கணக்கானவர் திரண்டிருக்கும் திறந்த வெளி அரங்கமாக இருந்தாலும், இவர் இசை, ரசிகர்களிடம் தவழும், கொஞ்சும், பாய்ந்து தாக்கும் பரவசமூட்டும்...

வானொலி இயக்குனர் 'துறைவன்' ஒரு நாள் கேள்வியொன்று கேட்டாராம் குன்னக்குடியிடம்:

''ஏதாவது ஒரு சப்ஜக்டை எடுத்துக் கொண்டு வயலினில் கோவையாக அதைச் சொல்ல முடியுமா?''

''ஏன் முடியாது? விஷயம் எது என்று சொல்லுங்கள். அதை நான் இசை வடிவமாக, ஒலி வடிவமாகவே ஆக்கிக் காட்டுகிறேன்!''

''காவேரி'' என்றார் துறைவன்.

''ஓகே!'' என்றார் குன்னக்குடி.

'துறைவ'னுக்கு ஆச்சரியம் ஒருபுறம்; சந்தோஷம் ஒருபுறம்.

காவேரி உற்பத்தியாகி, ஓடி வரும் அழகை, தம் வயலினில் வெளியாகும் இசை ஒலியில் மட்டுமே உருவாக்கி வாசித்துக் காண்பித்தார் குன்னக்குடி.

வானொலியில் இந்த நிகழ்ச்சி ஒலிபரப்பான போது ஏராளமான பாராட்டுக்களைப் பெற்றது என்பதோடு, இந்த நிகழ்ச்சியின் உயர்வு நின்று விடவில்லை. அகில இந்திய அளவில், சென்னை வானொலி நிலையத்துக்கு அவார்டு வாங்கிக் கொடுத்தது 'காவேரி.'

குன்னக்குடி இப்போது 'ஸோலோ' வாசிப்பதோடு நின்றுவிடுகிறார். முன்பெல்லாம் பிரபல பாடகர்களுக்குப் பக்கவாத்தியமாக வயலின் வாசித்திருக்கிறார். இப்போது இவர் வாசிப்பும் 'தனி; வழியும் தனி

திரைப்படங்களுக்கு இசை அமைத்த கர்



''...இதுவரை நான் சொன்ன அத்தனை பேரையும்விட, கர்நாடக இசையில் அதிக ராகங்கள் தெரிந்தவர் குன்னக்குடி திரு. வைத்தியநாதன். சிறிய வயதிலிருந்தே பெரிய பாடகர்களுக்கு வயலின் வாசித்தவர் ஆதலின், சகல ராகங்களும் அத்துப்படி. இவருடைய வயலின் பேசவும் செய்யும்! இப்படி ஒரு வயலின் வாசிப்பவரை இதுவரை நான் பார்த்ததில்லை. இவரது திறமைக்காக இவருக்கு ஒரு பத்மபூஷன் பட்டமே கொடுக்க வேண்டும்...''

—கண்ணதாசன் (திரையுலகைப் பற்றிய தொடர் கட்டுரையில்)

நாடக இசைக்கலைஞர் குன்னக்குடி. 'திருமலை தென்குமரி' படத்திற்குச் சிறந்த இசையமைப்பாளர் பரிசு பெற்றவர். தமிழ்நாடு அரசின் அரசவைக் கலைஞர் பதவி சமீபத்திய பரிசு. சென்னை நகரம் தண்ணீர்க் கஷ்டத்தில் தவித்த போது, புழலேரியில் முழங்காலளவு நீரில் நின்று கொண்டு 'அமிர்தவர்ஷிணி' வாசித்த, தன்னம்பிக்கை நிறைந்த கலைஞர்...

தியாகராஜர், தீட்சிதர், சியாமா சாஸ்திரிகள் பாடல்களை இவர் வயலினில் கர்நாடக இசையின் மடி, ஆசார, சுத்தத்துடன் வாசிக்கக் கூடிய திறன் படைத்தவர். பாமரரையும், பண்டிதரையும் தம் வயலின் வாத்தியத்தில் இணைத்த இசை மேதை குன்னக்குடி. தியாகராஜர் சமாதியில் வருடா வருடம் கர்ம சிரத்தையாக உற்சாகத்துடன் நடக்கும் ஆராதனை விழாக்களின் வெற்றியில் பெரும் பங்கு இவருக்கு உண்டு என்றால், அதற்காக அரும்பாடுபடும் குன்னக்குடி, அதைத் தமது ஆத்ம நிவேதனமாகவே கருதுகிறார்.

குன்னக்குடி ராமநாதபுரத்துக் குக்கிராமம். முருக க்ஷேத்திரம். தகப்பனார்

---

அமெரிக்காவில் பிலடெல்பியா நகரில் ஒரு நகைக் கடையில் புகுந்த திருடன் விலை உயர்ந்த மோதிரம் ஒன்றையும், பணப்பெட்டியையும் திருடிக் கொண்டு ஓட முற்பட்டான். அந்தக் கடைச் சொந்தக்காரி அவனைத் தடுத்து நிறுத்த முயன்றாள். இருவருக்குமிடையே நடந்த போராட்டத்தில் அந்தத் திருடனின் வலது கை ஆள்காட்டி விரலை அப்பெண் கடித்துத் துண்டித்து விட்டாள்! துண்டிக்கப்பட்ட அந்த விரலைப் போலீசார் கைது செய்து புலன் விசாரணை செய்து வருகின்றனர்!

'சன்' வார இதழிலிருந்து தோபஞ்சு.

---

ராமசாமி சாஸ்திரிகள் கதாகாலட்சேபம் செய்து வந்த மகா வித்துவான். அவரே குன்னக்குடி வைத்தியநாதன் அவர்களின் குரு. குன்னக்குடியின் நெற்றியில் ஆறு வகையான திருநீறு, குங்குமப் பட்டைகள் தென்படும். அப்பா சொல்படியே அவை.

குன்னக்குடி அவர்களுக்கு நாலு பையன்கள்; ஒரே பெண். மாப்பிள்ளை 'ராம்கி' (தோடி ராகம் இயக்குநர்) சத்யஜித் ரேயிடம் அதிக ஈடுபாடு கொண்டவர்.

வீட்டிலேயே படங்களை வீடியோவில் பார்ப்பாராம் குன்னக்குடி. நல்ல ஆங்கிலப் படங்களை இப்படிப் பார்ப்பதுண்டாம். தம் குழந்தைகளிடம் வெகு பிரியம் குன்னக்குடிக்கு. ''முழுச் சுதந்திரம் கொடுத்திருக்கிறார்; கட்டுப்பாட்டு எதுவும் இல்லை!'' என்றார் இரண்டாவது மகன். ''பசங்கள் எல்லாமே படிப்பில் படுசுட்டி!'' என்கிறார் குன்னக்குடியின் உதவியாளர்.

பேட்டி: **சாருகேசி**

வண்ணப்படம்: **யோகா**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032· (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

EGISTERED No. M. 4392
egistered as a Newspaper in Sri Lanka

அறிமுகம்!

மன்சீஸ் பிஸ்கட்ஸ்

கையளவு மன்சீஸை இன்றே ருசியுங்கள்!

கரகரப்பானது. காரசாரமானது.
சிறிதளவு மன்சீஸை ருசித்தவர்,
பாக்கெட்டு முழுவதையும் காலி
செய்தே தீருவர்.







சில விசேஷ நகரங்களில்
மற்றுமே கிடைக்கும்.

ஜீரா - விறுவிறுப்பான சீரகம் கலந்த கார பிஸ்கட்டுகள்
அஜ்வைன் - மொறுமொறுப்பான ஓமம் கலந்த உப்பு பிஸ்கட்டுகள்

OBM/9665/TAM